வீடி ரவுண்ட் அப்

# வீடியோ காமராஜர்



### மெந்த புலுசு... வலவ சாரு...

சென்னை ஜெனரல் பேட்டர்ஸ் ரோட்டில், புதிதாய்த் திறக்கப்பட்டுள்ள உணவகம் கோதாவரி. ஆந்திர உணவு வகைகள் மட்டுமே இங்கு கிடைக்கின்றன. இரண்டு ஐட்டங்களின் பெயர்கள் புதுமையாய் இருந்தன: 'மெந்த புலுசு!' 'வலவ சாரு!' இவை என்ன என்று விளக்கினார் உணவகத்தின் எம். டி. பிரபாகர் ரெட்டி. மெந்த புலுசு, என்பது வெந்தயத்தில் செய்யப்படும் ஐட்டம். சாதத்தில் கலந்து பிசைந்து சாப்பிடுகிறாற் போல் கொஞ்சம் கெட்டியான குழம்பு. மெந்த புலுசில் பெரிய துண்டங்களாய் வெட்டப்பட்ட வெங்காயம், முழுசாய்ப் பூண்டு இவையும் சேர்க்கப்படுகின்றன. வலவ சாரு என்பது, துவரம் பருப்பிற்குப் பதிலாக 'கொள்ளு' போட்டுத் தயாரிக்கும் ரசம். மிளகு, சீரகம், இஞ்சி எல்லாம் சேர்க்கப் படுகிறது. இவற்றின் சுவை எப்படி இருக்கும்? உணவகத்தின் பார்ட்னர் ஜாஃபர் இரண்டையும் சாம்பிள் கொடுத்தார். கொள்ளு ரசம், இரண்டு ஸ்பூன் சாப்பிட்டதும், 'ஜிவ்' வென்று உறைத்தாலும், 'ஜம்'மென்று இருந்தது. மெந்த புலுசு... காரம்... மணம், குணம் நிறைந்து ருசித்தது.

### கிருஷ்ணரைத் தேடி....

அண்மையில், மயிலை சீனிவாச சாஸ்திரி ஹாலில் 'கிருஷ்ணரைத் தேடி' என்கிற தலைப்பில் ஒரு கண்காட்சி நடைபெற்றது. மகாபாரத கிருஷ்ணர் சம்பந்தமான தொல் பொருள் அகழ்வாராய்ச்சிக் கண்டுபிடிப்புக்கள் பற்றிய புகைப்படங்களும், ஆதாரங்களும் இடம் பெற்றிருந்தன. கண்காட்சியைத் துவக்கி வைத்தவர் லயன்ஸ் கிளப்களின் மாநில கவர்னர் என். வி. கிருஷ்ணன். பிரதம விருந்தினர் சென்னைப் பல்கலைக் கழகத்தின் வைணவத் துறையைச் சேர்ந்த டாக்டர். வெங்கடகிருஷ்ணன். "என்ன ஒரே கிருஷ்ணர்கள் மயம்?" என்று கண்காட்சி நடத்திய இளைஞர் டி.கே.வி. ராஜனைக் கேட்டபோது, "கண்காட்சிக்கு வந்த இன்னோர் வி. ஐ. பி. யார் தெரியுமா? இந்தியன் பாங்கின் தலைவர் கோபாலகிருஷ்ணன்!" என்றார்.

### வீடியோ காமராஜர்

சென்னைத் தொலைக்காட்சிக்காக, சுபா சுந்தரம் காமராஜ் பற்றி ஒரு டெலிவிஷன் படம் தயாரித்திருக்கிறார். டாக்டர் பி. கிருஷ்ணன் என்பவர் அதிலே விவரிக்கும் சம்பவம் நெஞ்சை நெகிழ வைக்கிற ஒன்று. கிருஷ்ணனின் ஆறு வயதுச் சிறுவனுக்குக் கண்ணில் பிராப்ளம். இந்திய டாக்டர்கள் கைவிட்டு விட்ட நிலையில், அமெரிக்காவுக்கு அழைத்துச் சென்றால் சிறுவனின் பார்வை திரும்பும் என்கிற நம்பிக்கை இருந்தது. அயல்நாடு செல்ல அனுமதி கோரி, மருத்துவத்துறை இயக்குனருக்கு விண்ணப்பித்தாராம் கிருஷ்ணன். இயக்குனரோ, "விண்ணப்பத்தைக் கொடுத்து விட்டுப் போங்கள். அனுமதி வழங்கப் பத்து நாட்களாகும்" என்று சொல்ல, கிருஷ்ணன் பிரச்னையின் தீவிரத்தை விளக்கிய போது, "சட்ட திட்டங்களை மீற முடியாது" என்று கண்டிப்பாய்ச் சொல்லி விட்டாராம். கிருஷ்ணன், நேரே கோட்டைக்குச் சென்றாராம். வெளியில் புறப்பட்டுக் கொண்டிருந்த முதலமைச்சர் காமராஜரிடம் விஷயத்தைச் சொன்னதும், "கண் முக்கியமா? சட்டம் முக்கியமா?" என்று கேட்டுவிட்டு, ஒரு கடிதம் எழுதி, இதை இயக்குனரிடம் கொடுங்கள். அனுமதி உடனடியாய்க் கிடைக்கும்" என்றாராம். பத்து நாட்கள் காரியம் பத்தே நிமிடங்களில் முடிந்து விட்டது! அந்தச் சிறுவன் இன்று

அமெரிக்காவில் பெரிய டாக்டர்!

## தடை செய்தும் தலையெடுத்த ராகிங்

"கல்லூரி மாணவர்கள் அமைதியாய் இருக்கிறார்கள். ராகிங் இல்லவே இல்லை" என்று பத்திரிகையாளர் கூட்டத்தில் மார் தட்டிக் கொண்டார் கமிஷனர் துரை. ஆனால் நாம் நேரில் பார்த்த சம்பவம் இது. நுங்கம்பாக்கத்தில் லயோலா கல்லூரி சீனியர் மாணவர்கள், ஜூனியர்களை 'நாகாஸ்' ஹோட்டலுக்கு அழைத்து வந்து, அங்கே ராகிங் செய்தார்கள். எழுத்தில் விவரிக்க முடியாத செயல்களையெல்லாம், அந்த ஹோட்டலில் சீனியர்களின் கட்டளைப்படி, ஜூனியர்கள் செய்தனர். ஹோட்டலில் ஒரே கலாட்டா, கும்மாளம். சாப்பிட வந்த பொது மக்களுக்கோ சங்கடம், தொந்தரவு. மாணவர்கள் ஹோட்டல் நிர்வாகத்தின் அனுமதியுடன்(!)தான் இப்படி நடந்து கொண்டார்கள் என அந்த உணவக 'பேரர்' மூலமாய் அறிந்தபோது கோபமாய் வந்தது. விவரத்தைக் கல்லூரி முதல்வருக்கு போனில் நாம் சொன்ன போது நடவடிக்கை எடுப்பதாய்ச் சொன்னார்.

— மௌஷ்மி.



## எஸ்.கே.டி.ஆர்.

'ஜெயலலிதாவின் தயவு இல்லாமல் நீங்கள் எம். பி. ஆகியிருக்க முடியாதே' என்றும் காங்கிரஸுக்குள் நிலவும் கோஷ்டிப் பூசல்கள் பற்றியும் கேட்டால், "சில்லறைத்தனமான விஷயங்களில் என்னை இழுக்காதீர்கள்; நான் கொஞ்சம் உயரப் போக விரும்புகிறேன்" என்று பதிலளிக்கும் எஸ். கே. டி. ராமச்சந்திரன், முதன் முறையாக நாடாளுமன்றத்தில் அடியெடுத்து வைக்கப் போகிறார். தென்காசி அருகே உள்ள மடத்தூர் என்ற கிராமத்தைச் சேர்ந்த விவசாயக் குடும்பம் இவருடையது. அனைவருமே நீண்ட காலமாகக் காங்கிரஸ்தான். பி. ஏ. படித்துவிட்டு அரசாங்க உத்தியோகத்தில் அமர்ந்தவர், 1967 — இல் காங்கிரஸ் அடைந்த தோல்வி கண்டு விசனித்துக் காமராஜரைச் சந்தித்தார். "வேலையை விட்டு விடுகிறேன்; காங்கிரஸுக்கு என்னாலான பணியைச் செய்ய விரும்புகிறேன்" என்றார். "சமயம் வரும்போது செய்யலாம்; இப்போ வேண்டாம்" என்றார் காமராஜர். ஆனால் எஸ். கே. டி. கேட்கவில்லை. ஒன்பது வருஷ சர்வீஸை உதறிவிட்டு, காங்கிரஸ் பணியாற்றி, மாவட்ட அளவில் பல பதவிகளை வகித்தார். அடுத்த தடவை காமராஜரைச் சந்திக்க நேர்ந்த போது 'என்ன சொல்வாரோ' என்று இவர் சற்றுக் கவலைப்பட, அவரோ, "மடத்தூர் தம்பி தானே!" என்று ஞாபகம் வைத்திருந்து கேட்டுத் தட்டிக் கொடுத்தார். 71, 77 சட்டசபைத் தேர்தல்களில் எஸ். கே. டி. தோல்விகளையே சந்தித்தார். காமராஜருக்குப் பிறகு மூப்பனாரைத் தலைவராக ஏற்றார். வாழப்பாடி, தமிழ்நாடு காங்கிரஸ் தலைவரானதும் எஸ். கே. டி. யைப் பொதுச் செயலாளராகப் போட்டார். இதுபற்றிக் கேட்டால், "காங்கிரஸ் என்ன கவர்ன்மெண்ட் ஆஃபீஸா? சார்ஜ் ரிப்போர்ட் கொடுக்கணுமா? எந்த நிலைமையிலும் கட்சிக்குப் பாடுபடணும்; அதுதான் என் லட்சியம்!" என்கிறார் இந்த ஐம்பத்தாறு வயதுக்காரர்.

— கௌசல்யா.

படம்: சுபா



# சொன்னது சொன்னபடி

o தேர்தல் நெருங்கி வருவதால், நாங்கள் எந்தக் குழப்பமும் உண்டாக்கக் கூடாது என்று எங்கள் தலைவர் சொல்லியிருக்கிறார். கட்சி எங்கள் சேவையைப் பயன்படுத்திக் கொள்ள விரும்பினால், எங்களால் முடிந்ததைச் செய்யத் தயாராக இருக்கிறோம். கட்சியின் வெற்றிக்காக, இப்போது சோர்ந்திருக்கும் தொண்டர்களை உற்சாகப்படுத்த, எப்படி வேண்டுமானாலும் முடிவு செய்ய ராஜீவிடம் விட்டு விட்டோம்.

— மூப்பனார்.

o கடந்த ஆறு மாதங்களில், வானொலியின் முக்கிய செய்தி அறிவிப்புகளில், எதிர்க்கட்சிகளுக்கு 4292 வரிகளும், ஆளும் கட்சிக்கு 3124 வரிகளுமே கிடைத்திருக்கின்றன.

— செய்தி — ஒலிபரப்புத் துறை அமைச்சர் பகத்.

o எதிர்க் கட்சிகள் பற்றி அவதூறாகச் சொன்ன வரிகளை எல்லாம் எதிர்க் கட்சிகளின் கணக்கில் சேர்த்துக் கொண்டு விட்டார்கள். என்ன விசித்திரமான புள்ளி விவரம் இது!

— ஜனதா தளத் தலைவர் ஜெய்பால் ரெட்டி.

o நாங்கள் ஒரு ராஜ்யசபா பதவியை இ. காங்கிரசுக்கு ஏன் விட்டுக் கொடுத்தோம் என்றால், எங்கள் இரு கட்சிகளுக்கு இடையே உள்ள உறவு இன்னும் பலமாக ஆகத்தான். இது விஷயமாக நாங்கள் ஒரு முடிவு அறிவிப்பதற்கு முன்னால், மத்திய அமைச்சர் தினேஷ் சிங்குடன் தொலைபேசியிலேயே எல்லாம் விவரமாகப் பேசி விட்டோம்.

— செல்வி. ஜெயலலிதா.

o ஸ்ரீ ராமச்சந்திரா மருத்துவக் கல்லூரி என்ற பெயரை, தமிழ்நாடு அரசு மருத்துவக் கல்வி மற்றும் ஆராய்ச்சி நிலையம் என்று மாற்றி, எம்.ஜி.ஆரின் நினைவையே அழித்து விடப் பார்க்கிறது இந்த அரசு.

— முன்னாள் அமைச்சர் திருநாவுக்கரசு.

o திருநாவுக்கரசு சொல்லுவதைப் பார்த்தால் அது ஏதோ எம்.ஜி.ஆரின் கல்லூரி என்கிற மாதிரி அல்லவா இருக்கிறது!

— முதல்வர் கருணாநிதி.

o திறமையைக் காண்பிப்பதில் போட்டா போட்டி இருக்க வேண்டும்... அனுகூலமான விலையில் விற்பனை செய்தால், சமையல் எரிவாயுவை இன்னும் அதிகமான அளவுக்குப் பயன்படுத்த முடியும்.

— மத்திய அமைச்சர் சாத்தே.

o ஏராளமான சமையல் எரிவாயுவை, தயாரிப்பு நிலையிலேயே எரிய விட்டு வீணாக்க வேண்டியிருக்கிறது. அதை மட்டும் சரியாகப் பயன்படுத்த முடிந்தால் எண்ணெய் — எரிவாயு கமிஷனுக்கு நிறைய லாபம் கிடைக்கும்.யாருடைய திறமையின்மைக்கோ நாங்கள் அவதிப்பட வேண்டியிருக்கிறது.

— எண்ணெய்—எரிவாயு கமிஷன் தலைவர் வாஹி.

o எம்.ஜி.ஆரின் ஆட்சிக் காலம், நிர்வாகமே ஸ்தம்பித்துப் போய் விட்ட இருண்ட காலம். மாநிலம் பல வருடங்களுக்குப் பின்நோக்கித் தள்ளப்பட்டு விட்ட காலம். அப்போது, முதலமைச்சர் பார்வைக்கு வராமலே பல கோப்புகளின் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது.

— பேராசிரியர் அன்பழகன்.

தொகுப்பு: சித்தார்த்



என்று இன்னொரு சீட்டு எழுதித் தர, அங்கே போய் நாற்றைம்பது ரூபாய் கொடுத்து இதயத் துடிப்பைச் சரிபார்க்கும் பரிசோதனையைச் செய்து கொண்டு, டாக்டர் ரோஹிணிக்கு 150 ரூபாயைக்

# திணறடிக்கும்



• நெஞ்சகக் கற்களை அறுவைச் சிகிச்சையின்றியே அகற்றிடும் லித்தோட்ரிப்ஸி கருவி. (அட்டைப் படம்.)



• டயாலிஸிஸ்



"ஒரு வாரமாகக் கை வைத்தியம் பார்த்தாச்சு. காஃப் சிரப் வாங்கிச் சாப்பிட்டுப் பார்த்தாச்சு. இன்னமும் இருமல் விடவில்லை. ராத்திரி தூக்கம் கெட்டுப் போயி ஆபீசில் ரொம்ப கஷ்டப்படுறேன், டாக்டர்!"

— ரகுபதி அந்த பாலிகிளினிக் டாக்டர் முரளிதரனிடம் இதைச் சொன்னதுதான் தாமதம். உடனே அவர் நெஞ்சுக் கூட்டை (chest) எக்ஸ்—ரே எடுக்கச் சீட்டு எழுதித் தந்து விட்டார்.

எண்பது ரூபாய் செலவழித்து எக்ஸ்ரே எடுத்துக் கொண்டு இரண்டு நாட்களில் திரும்பினார் ரகுபதி. "இப்போ இருமல் தேவலை டாக்டர்... இருந்தாலும் எக்ஸ் ரேயைக் காண்பிச்சுடலாம்னு..."

எக்ஸ்ரேயை உருவிப் பார்த்த டாக்டர். புருவத்தை நெரித்தார். "எதுக்கும் உங்களுக்கு ஒரு ஈ.ஸி.ஜி. எடுத்துடறது நல்லது. டாக்டர் ரோஹிணி ஹார்ட் ஸ்பெஷலிஸ்ட். மைலாப்பூரில் இருக்கு அவங்க கிளினிக்"



• டாக்டர் சொக்கலிங்கம்.

கொடுத்து விட்டு இதயத்தில் ஒரு கோளாறும் இல்லை என்று உத்தரவாதம் பெற்றுக் கொண்டு, மீண்டும் பாலிகிளினிக் வந்து மூன்றாவது முறையாக டாக்டர் முரளிதரனுக்கு முப்பது ரூபாயை அழுது விட்டு...

பாவம் ரகுபதி! வெறும் இருமலுக்கு முந்நூற்றி இருபது ரூபாய்க்கு மேல் செலவு! நுரையீரல் கோளாறா? இதயக் கோளாறா? என்று அனாவசியமாக ஒரு வாரம் டென்ஷன்!

• ரகுபதி நிலையாவது தேவலாம்! திருச்சி பரமசிவம் குடும்பத்தின் கதை பரிதாபம்! நான்கு மகன்களும் மூன்று மகள்களும் சேர்ந்து எண்பதாயிரத்துச் சொச்சம் செலவழித்தார்கள். அப்படியும் கான்ஸரின் பிடியில் கற்பனைக்கும் எட்டாத சித்திரவதையை அனுபவித்துக் கொண்டிருந்த தாயாரைக் காப்பாற்ற முடியவில்லை. "கான்ஸரின் மிக முற்றிய நிலை என்று தெரிந்தும், போகிற உயிரைப் பிடித்து நிறுத்தி, எல்லா உறுப்புக்களிலும் குழாய்களைச் சொருகி இயந்திரங்களைப் பொருத்தி இயங்கச் செய்து, கான்ஸரால் ஏற்படும் துன்பம் போதாது என்று இந்தச் செயற்கை இயக்கங்களால் அவரை மேலும்

• பெயர்கள் கற்பனை; சம்பவங்களும், செலவுகளும் நிஜம்! நிஜம்!

வதைத்து விட்டோமோ, என்றே இப்போது வருத்தப்படுகிறோம்'' என்கிறார்கள் அக் குடும்பத்தினர். சுய இயக்கங்களோ நினைவோ இல்லாத நோயாளிக்கு அந்தத் தனியார் மருத்துவமனையில் கிடைத்த 'மரியாதையை'க் கண்கலங்கியபடி நினைவு கூர்ந்தார்கள்.

**ந**வீன மருத்துவ வசதிகள் பெருகி வருவதால் எவ்வளவுக்கு எவ்வளவு நன்மை ஏற்பட்டுள்ளதோ அவ்வளவுக்கு அவ்வளவு பணக் கஷ்டமும் மனக் கஷ்டமும் மக்களுக்கு ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. இதனை முன்னணி டாக்டர்களே ஒப்புக் கொள்வதோடு, தங்கள் துறையைப் பீடித்துள்ள வியாபார நோக்கைக் கண்டிக்கவும் செய்கிறார்கள்.

சென்னை, கே. ஜே. ஹாஸ்பிடலைச் சேர்ந்த டாக்டர். ஜகதீசன் கூறினார்:

# மருத்துவச் செலவுகள்



• டாக்டர் ஜெகதீசன்.

''வியாபார நோக்குள்ள டாக்டர்கள் அப்பாவி மக்களை 101 சதவிகிதம் ஏமாற்றிப் பணம் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். ஓர் உதாரணத்துக்குச் சொல்கிறேன்: தீராத தலைவலியோடு ஒரு பேஷண்ட் வந்தால் அதற்கான காரணம் வெறும் பார்வைக்கோளாறாக இருக்கலாம் அல்லது சைனஸைடிஸாக இருக்கலாம், அல்லது மூளையில் தோன்றியுள்ள டியூமராகவும் இருக்கலாம். மனசாட்சியுள்ள டாக்டரா யிருந்தால் புற அறிகுறிகள் மூலமும் வெறும், உடல் பரிசோதனை மூலமும் என்ன கோளாறு என்பதைக் கண்டுபிடித்து விடுவார். இதற்கு நோயாளியின் உடலை ஆராய்வதற்குச் சிறிது நேரம் ஒதுக்குவதோடு அவரோடு பேசி, பல கேள்விகள் கேட்டு வலியின் தன்மையை அறிந்து கொள்ள வேண்டியிருக்கும். ஆனால் இன்றைய டாக்டர்களுக்கு அதற்கு ஏது நேரம்! ஒவ்வொரு நிமிஷமும் பைசா அல்லவா! அதனால் 'பனிச் சென்று 'CT Scanning' செய்து கொள்ள ஒரு சீட்டை எழுதிக் கொடுத்து விடுவார்கள்! இவர்கள்

• பரிசோதனைக் கூடம்.





• இன்டென்சிவ் கேர் யூனிட்.



ஜப்பான் மக்களிடையே பரபரப்பாக விற்பனையாவது — எலெக்ட்ரானிக் நோட்டுப் புத்தகங்கள்! இதில் நாட்காட்டி, வாய்ப்பாடு, எலெக்ட்ரானிக் கால்குலேட்டர் எல்லாம் உண்டு! அறிமுகப்படுத்தப்பட்ட ஆண்டே எலெக்ட்ரானிக் நோட்டுப் புத்தகங்களின் விற்பனை 20 லட்சத்தைத் தாண்டி விட்டது!

தகவல்: 'ஜப்பான் காலிங்.'

— தோபஞ்க.

செய்ய வேண்டிய வேலையை 'மிஷின்' செய்து விடுவதால் இவர்களுக்கு மிச்சமாகும் நேரத்தில் இன்னும் சம்பாதிக்கலாம் என்பதோடு 'ஸ்கானர்' உரிமையாளரிடமிருந்து இவருக்குக் கமிஷன் வேறு கிடைக்கிறது! அந்தக் கமிஷனையும் சேர்த்து அவர் நோயாளியிடம்தான் கறக்கப் போகிறார்!"

"இப்படியிருக்க மருத்துவச் செலவு வருடந்தோறும் பன்னிரண்டு சதவிகிதம் அதிகரித்துக் கொண்டு வருவதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது?" என்றோம் டாக்டர். ஜகதீசனிடம்.

"பன்னிரண்டு சதவிகிதத்துக்கும் மேலாக அதிகரித்து வருகிறது" என்ற அவர் "அதற்கு வேறு பல காரணங்களும் உண்டு" என்றார்.

"உலகெங்கிலும் மருத்துவச் செலவு அதிகரித்துக் கொண்டுதான் இருக்கிறது. மருந்துகள் மருத்துவ உபகரணங்கள், மின்சாரம் என்று எல்லா விலைகளும் ஏறிக் கொண்டிருக்கின்றன. நம் நாட்டில் மனித வளம் நிறைய இருப்பதால் கூலி மற்றும் சம்பளச் செலவு மட்டும் மற்ற நாடுகளைப் பார்க்க நம் நாட்டில் குறைவு. மற்றபடி பொதுவான விலைவாசி உயர்வு மருத்துவத் துறையையும் பாதித்துள்ளது. பல நவீன உபகரணங்களை ஏராளமான செலவில் இறக்குமதி செய்ய வேண்டியுள்ளது... அரசாங்கத்தின் கொள்கை மருத்துவ உபகரணங்களின் இறக்குமதிக்கு ஆதரவாகவே உள்ளது. Open General Licence இன் கீழ் சுலபமாக இறக்குமதி செய்ய முடியும். ஆனால் குறைந்த வட்டியில் கடனுதவியோ மானியமோ மருத்துவ உபகரணங்கள் வாங்குவதற்குத் தரப்படுவதில்லை. MRI எனப்படும் Magnetic Resonance Imager என்ற கருவிதான் இப்போது latest இறக்குமதி. இதன் விலை சுமார் இரண்டு — மூன்று கோடி! பதினைந்து சதவிகித வட்டி என்று கணக்குப் பார்த்தால் வட்டி மட்டுமே நாற்பத்தைந்து லட்சம் ஆகும். தவிர வருஷா வருஷம் முதலை வேறு கட்ட வேண்டும். அதனால் ஒரு பரிசோதனைக்கு இரண்டு அல்லது மூன்றாயிரம் கட்டணம் வசூலித்தால்கூட ஆச்சரியப்படுவதற்கில்லை.

"இவ்வாறு கடன், வட்டி, முதலீடு என்ற கவலைகள் வரும் போது சேவை மனப்பான்மை பின்னுக்குத் தள்ளப்படுகிறது. மருத்துவ உபகரணங்கள் இறக்குமதி விதிகளைத் தளர்த்திய அரசாங்கம், அதற்கு வட்டியில்லாத அல்லது குறைந்த வட்டியில் சுலபத் தவணைக் கடனுதவிகளை ஏற்பாடு செய்யலாம். மிக நவீன மருத்துவ உபகரணங்களை வைத்துக் கொள்ளத் தனியாருக்கும் மருத்துவமனைகளுக்கும் சில சட்ட திட்டங்களை வகுக்கலாம். மருத்துவமனைகள் ஆரம்பிப்பதற்கு வரையறுக்கப்பட்ட விதிகள் இல்லாததால் மூலைக்கு மூலை பாலி கிளினிக்குகளும், தனியார் மருத்துவமனைகளும் காளான்களாகப் பெருகிக் கொண்டிருக்கின்றன. இவற்றுள் பல, தொழிலதிபர்களின் பண முதலீட்டைக் கொண்டு துவங்கப்படுகின்றன. இவர்களால் மருத்துவத் துறையும் இதர தொழில் துறைகள் போல் வியாபார நோக்கையே பிரதானமாகக் கொண்டதாக மாறி வருகிறது.

"நவீன கருவிகள் அடியோடு தேவையற்றவை என்றும் ஒதுக்கி விடக் கூடாது. கடந்த அரை நூற்றாண்டாகச் சராசரி இந்தியனின் ஆயுள் காலம் அதிகரித்துள்ளது. இதனால் முதுமையில் அதிகமாய்த் தாக்கும் இதய நோய், கான்ஸர் போன்ற கோளாறுகள் அதிகரித்து வருகின்றன. இவற்றுக்குச் சிகிச்சை அளிக்க இந்த உபகரணங்கள் பேருதவியாக இருக்கின்றன.

"ஆனால் உபகரணங்கள் அதிகரிக்க அதிகரிக்க மக்களுக்குச் செலவு அதிகரிப்பதோடு, டாக்டர்கள் நாடி பிடித்துப் பார்த்தும், நோயாளியின் உடலைத் தொட்டும் அமுக்கியும் பார்த்தும் நோயை உணரும் கலை படிப்படியாக மறைந்து வருகிறது. General physician எனப்படும் all-round டாக்டர்களுக்குப் பதிலாக ஸ்பெஷலிஸ்டுகள் பெருகிக் கொண்டிருக்கிறார்கள். பொறுமையாக வைத்தியம் செய்த குடும்ப டாக்டர்கள் இனம் மெள்ள மறைந்து வருகிறது. வெறும் ஸ்டெத்தை வைத்துக் கொண்டு அற்புதமாகப் பணியாற்றிய எங்கள் முன்னோர்களுக்கு நாங்கள் தலை வணங்கத்தான் வேண்டும்.

"நடுத்தர வர்க்கத்தினருக்கு உதவும் வகையில் நோய் இன்ஷூரன்ஸ் திட்டங்கள் கொண்டு வருவதால் இணறடிக்கும் மருத்துவச் செலவுகளைச் சமாளிக்க உதவலாம். ஆனால் டாக்டர்களுக்கு அடிப்படை நற்பண்புகளும் ஓரளவு லட்சிய நோக்கும் இல்லாதவரை நோயாளிகள் பாடு திண்டாட்டம்தான். இந்தப் பண்புகள் கல்லூரியிலேயே போதிக்கப்பட வேண்டும்..." என்று முடித்தார் டாக்டர். ஜெகதீசன்.

லட்சக்கணக்கில் ரூபாய் பெற்றுக் கொண்டு 'சீட்' கொடுக்கும் கல்லூரிகளில் என்ன பண்புகளைப் பயில முடியும்? வீட்டை விற்றோ நகைகளை அடகு வைத்தோ பணம் கட்டி டாக்டருக்குப் படிப்பவன், போட்ட முதலைத் திருப்பிப் பெறு

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத்
# தேவை காம்ப்ளான்



**ஏனெனில், காம்ப்ளான், குழந்தைகளுக்கு அன்றாடம் தேவைப்படும் அத்யாவசிய ஊட்டச்சத்தை வழங்குகிறது.**

*சாதாரணமாக 15 அல்லது 16 வயது வரை, குழந்தைகளின் வளர்ச்சிக்கு புரதம், அடிப்படையான ஊட்டச்சத்தாகும். ஆகவே உங்கள் குழந்தைகளுக்கு இப்போது காம்ப்ளான் மிகமிக அவசியம். புரதச் சத்துக்களிலேயே தலைசிறந்த பால் புரதம் (20%) கொண்டது, காம்ப்ளான். மேலும் 22 ஆதார உணவுச் சத்துக்களும் காம்ப்ளானில் உள்ளன.*

*காம்ப்ளான் இனிய சுவைகளில் கிடைக்கிறது.*




**23**
மூலாதார
சத்துணவுகள்
திட்டமிட்ட விகிதங்களில்

பால் சேர்க்கத் தேவையில்லை.

# காம்ப்ளான்®

**திட்டமிட்ட பரிபூரண உணவு**

GX/38/203 T M L

வதில் குறியாக இல்லாமல் மக்கள் சேவையைப் பற்றியா நினைக்கப் போகிறான்... என்ற கேள்விகள் மனத்தில் எழ டாக்டர் ஜெகதீசனிடம் விடை பெற்றோம்.

மிக நவீன, உயர்ரக மருத்துவ மனையான போதிலும் கே. ஜே. ஹாஸ்பிடலில் பதினைந்து படுக்கைகள் ஏழைகளுக்கு இலவச மருத்துவ வசதிக்கென ஒதுக்கப்பட்டுள்ளன. ரெட் ஹில்ஸ் அருகே சிரினியம், பண்ணிவாக்கம், ஆங்காடு என்ற மூன்று கிராமங்களைத் தத்தெடுத்துக் கொண்டு அங்குள்ளோருக்கு இலவச நோய்த் தடுப்பு மற்றும் சிகிச்சை வசதிகளையும் செய்து வருகின்றனர். இதை அறிந்த போது மகிழ்ச்சியாக இருந்தது.

"தீவிர சிகிச்சை எனப்படும் 'க்ரிடிகல் கேரு'க்காக இப்போதெல்லாம் நிறையவே பரிசோதனைகள் செய்ய வேண்டியிருக்கிறது" என்கிறார் தேவகி மருத்துவ மனையைச் சேர்ந்த டாக்டர். சொக்கலிங்கம்.

"ப்ளட் கேஸ் அனாலிஸிஸ், பயோகெமிகல் பரிசோதனைகள் எல்லாம் தேவையாயிருக்கின்றன. மானிடரிங் எனப்படும் கண்காணிப்பு, தொடர்ந்து செய்ய வேண்டியிருக்கிறது. உலகச் சந்தையில் இப்போது தான் இந்த இயந்திரங்களின் விலைகள் போட்டி காரணமாக ஓரளவுக்குக் குறைந்து வருகின்றன. ஆரம்பத்தில் ஸி டி ஸ்கான் விலை ஒரு கோடி ரூபாயாக இருந்தது; இப்போது கிட்டத்தட்ட பாதி விலைக்கு வந்து விட்டது. இருந்தாலும் கடனுதவியின்றி இவற்றை வாங்க முடியாது! மருத்துவமனை 25 சதவிகிதம் முதல் போட்டால் வங்கியிலிருந்து 75 சதவிகிதம் கடன் கிடைக்கிறது. கடன், வட்டி பளுவோடு மருத்துவ மனைப் பராமரிப்புச் செலவுகள், நிர்வாகச் செலவுகள் என்று வேறு இருக்கின்றன. பத்து சதவிகித இன்—பேஷன்ட்களுக்கும், நாற்பது சதவிகித வெளிப்புற பேஷன்ட்களுக்கும் இலவசமாகச் சிகிச்சை செய்தால் மட்டுமே கஸ்டம்ஸ் ட்யூட்டி விலக்குப் பெற முடியும். எல்லாமாகச் சேர்ந்து நடுத்தர வர்க்க நோயாளிகளின் தலையில்தான் விடிகிறது.

"நம் நாட்டு மக்களிடையே மெடிகல் இன்ஷ்யூரன்ஸ் செய்து கொள்ளும் எண்ணம் இன்னும் பரவவில்லை. இன்ஷ்யூரன்ஸ் இருந்தால் பளு தெரியாது. டாக்டர்களில் ஸ்பெஷலிஸ்டுகள் இருப்பது போல், மருத்துவமனையும் ஒரு குறிப்பிட்ட துறையில் நிபுணத்துவம் பெற்று அந்தத் துறைக்கு உட்பட்ட நோயாளிகளை நிறைய அளவில் பெற முடியுமானால் செலவு குறைய வழி உண்டு.

"நவீன மருத்துவ சாதனங்களும், மருந்துகளும் கிடைக்கிற போது, 'எப்படியாவது உயிரோடு இருந்தால் போதும் டாக்டர். எவ்வளவு செலவானாலும் பரவாயில்லை!' என்று சொல்கிறவர்கள் நிறையவே இருக்கிறார்கள். நவீன இயந்திரங்களின் உதவியால், துவக்க நிலையிலுள்ள இதய மற்றும் மூளை பாதிப்பு நோய்களைக் கண்டறிந்து, சிகிச்சை அளித்து, நீண்ட நாள் உயிர் வாழச் செய்ய முடியும். இன்னும் அதிக நாள் வாழ்ந்து குடும்பத்திற்கு உதவியாக இருக்க வேண்டும் என்ற நிலையிலுள்ள நோயாளிகள் விஷயத்தில், அவர்கள் எத்தனை செலவானாலும் பரவாயில்லை என்றுதான் எண்ணுவார்கள்.

"ஆனால் உபயோகமற்ற முறையில் ஆயுளை நீடிக்கச் செய்வதில் அர்த்தமில்லை. உயிரோடிருப்பதற்கான சப்போர்ட் மட்டும் கொடுத்து விட்டு, ஒன்றும் செய்ய முடியாத ஜடப்பொருளாக நோயாளியை வைத்திருப்பது விஞ்ஞான ரீதியாக முறையானதல்ல. அப்படி ஒரு நோயாளியை வைத்திருப்பது தவறு என்று நான் நினைக்கிறேன். அதற்கென்று கருணைக் கொலையை நான் ஆதரிப்பவனுமல்ல.

"மருத்துவர்களும் சரி, நோயாளிகளும் அவர்களது உறவினர்களும் சரி, இயற்கையான முடிவை ஏற்கச் சித்தமாயிருக்க வேண்டும். 'உங்களால் முடிந்தவரை காப்பாற்றுங்கள் டாக்டர்!' என்று நெருங்கிய உறவினர்கள் கேட்டுக் கொள்ளும் போது, ஒரு மருத்துவர் 'சரி, நம்மால் முடிந்ததைச் செய்வோம்' என்று முழு மூச்சுடன் செயல்பட வேண்டியதுதான்.

"இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு சிறு வேண்டுகோளையும் வைக்கிறேன். எத்தனையோ நோயாளிகளுக்கு உறுப்புக்கள் தேவையாயிருக்கின்றன. உடல் உறுப்புக்களைத் தானம் கொடுப்பது எத்தனை உத்தமமானது என்று நான் இந்தச் சமயத்தில் நினைவுபடுத்த விரும்புகிறேன். தங்கள் இழப்பில் இன்னோர் உயிர் பிழைத்து வாழ முடியும் என்ற நினைவு, நிச்சயம் மனச் சாந்தியைக் கொடுக்கும் அல்லவா?"

— சாருகேசி, சீதா ரவி

அட்டை வண்ணப்படம் மற்றும் படங்கள்: யோகா

"எங்க மேனேஜருக்கு, லஞ்சம் வாங்குறவங்களைக் கண்டாலே பிடிக்காது."

"பரவாயில்லையே....?!"

"லஞ்சம் தர்றவங்களைத்தான் பிடிக்கும்!"

— சீர்காழி ஸ்ரீராம்.



# கல்கி

1989 ஜூலை 23
மலர் 47 இதழ் 51
சுக்ல ஆடி 8


## அலெக்ஸாந்தர் கூறிய கசப்பான உண்மைகள்!

கசப்பான உண்மைகளைத் தாம் பேசத் தயங்காதவர் என்பதைத் தமிழக ஆளுனர் அலெக்ஸாந்தர் பல முறை நிரூபித்திருக்கிறார். சில காலம் முன்பு, 'வாகன ஓட்டிகளுக்கு லைசென்ஸ் வழங்கும் முறையானது, கொல்வதற்கு லைசென்ஸ் வழங்குவது போல் செயல்படுகிறது' என்று அவர் கடுமையான விமர்சனம் செய்யப் போக, வாகன ஓட்டிகளுக்கு லைசென்ஸ் வழங்கும் முறையில் பல முன்னேற்றங்களைத் தமிழக அரசு புகுத்தியிருக்கிறது.

மற்றும் ஒரு கசப்பான உண்மையை அலெக்ஸாந்தர் சமீபத்தில் கூறியிருக்கிறார். ரிஸர்வ் வங்கி ஊழியர்களின் பயிற்சிக் கல்லூரி வெள்ளி விழாவில் அவர் பேசும்போது, 'கறுப்புப் பணத்தின் கொட்டத்தை அடக்கினால்தான் நாட்டின் பொருளாதாரம் முன்னேறும்' என்று சொன்னார். 'கறுப்புப் பணத்தைக் கட்டுப்படுத்தாத வரை தொழில் வளமும் பெருகாது; சமுதாய நீதியும் கிட்டாது. மக்கள் நலனுக்கான பல்வேறு திட்டங்களும் அவற்றை நிறைவேற்ற எடுக்கப்படும் முயற்சிகளும் விழலுக்கு இறைத்த நீராகும்.'

ஆளுனர் தொடர்ந்து பேசுகையில், 'நாட்டின் மொத்த உற்பத்தி மதிப்பில் நாற்பது சதவீதம் என்பது எவ்வளவு ரூபாய் பெறுமானமுள்ளதோ, அத்தனை ரூபாய் இங்கே கறுப்புப் பணமாக வளைய வந்து கொண்டிருக்கிறது' என்ற திடுக்கிட வைக்கும் உண்மையைக் கூறினார். 'இந்த நிலைமை நீடிக்க எந்த ஒரு நாடும் அனுமதிக்கக் கூடாது' என்று எச்சரித்த அலெக்ஸாந்தர், 'கள்ளக் கடத்தல் போன்ற இனங்களில் கறுப்புப் பணம் விளையாடுகிறது' என்றும், 'கறுப்புப் பணமே லஞ்ச ஊழலுக்கு முக்கிய காரணம்' என்றும் மறுக்க முடியாத உண்மைகளைப் பிட்டு வைத்தார்.

அலெக்ஸாந்தர் கூறியிருப்பது ஒன்றும் புதிய விஷயமேயல்ல. பல ஆண்டுகளுக்கு முன்பே ராஜாஜி பல முறை கூறி எச்சரித்த ஒன்றுதான். பல பொருளாதார மேதைகளும் இதைச் சுட்டிக்காட்டி அபாயம் நெருங்குவதை உணர்த்தியிருக்கிறார்கள். ராஜாஜி சொன்ன போது கேட்காத ஆட்சியாளர்கள் இப்போது இந்திரா காந்தியின் மதிப்பில் உயர்ந்தவரான அலெக்ஸாந்தர் கூறும் போதாவது செவி சாய்ப்பார்களா? சந்தேகம்தான்! காரணம் என்ன?

அலெக்ஸாந்தர் கூறுவது போல் கறுப்புப் பணத்தால் லஞ்ச ஊழல் பெருகுவது உண்மை என்றாலும் அதைவிட, லஞ்ச ஊழல் காரணமாகக் கறுப்புப் பணம் பெருகுவது தான் அதிகம்! அரசியல்வாதிகள் லஞ்சம் என்றோ தேர்தல் நிதி என்றோ பணம் கேட்கும்போது தொழில் அதிபர்கள் அதனைக் கணக்கில் வராத கறுப்புப் பணமாகத் தரவேண்டிய நிர்ப்பந்தத்துக்குள்ளாகிறார்கள். எனவே அவர்கள், கறுப்புப் பணத்தை உருவாக்குகிறார்கள்! அரசியல்வாதியோ பதவி மோகம், பணத்தாசை காரணமாகக் கறுப்புப் பணத்துக்கு அடிமைப்பட்டுப் போகிறான். மேல்நாடுகளில் நமது அரசு சார்பில் பொருள்கள் வாங்கப்படும் போது இங்கு ஆட்சி அதிகாரத்தில் உள்ளவர்களுக்குக் கோடிக்






கணக்கில் தரப்படும் 'கமிஷன்' கறுப்புப் பணப் பொருளாதாரத்தைப் பலப்படுத்துகிறது.

கறுப்புப் பணம் உருவாக மேலும் ஒரு முக்கிய காரணம் அபரிமித வரி விதிப்பு. சம்பாதிப்பதில் எண்பது சதம் தொண்ணூறு சதம் என்று வரி செலுத்த நேருமானால் லாபத்தைக் குறைத்துக் காட்டி, வரி ஏய்ப்புச் செய்து, கணக்கில் வராத கறுப்புப் பணமாக வைத்திருக்கலாமே என்ற எண்ணம் ஏற்படுவது மனித இயல்பு. இந்தக் கறுப்புப் பணம் வட்டிக்கு விடப்படும்போது மேலும் கறுப்புப் பணம் உருவாகக் 'கறுப்புப் பணப் பொருளாதாரம்' என்று தனியே ஒன்று இயங்கத் தொடங்குகிறது.

கறுப்புப் பணம் உள்ளவர்கள் அதனைத் தாறுமாறாகச் செலவு செய்யும் போது, பண வீக்கமும் விலைவாசி உயர்வும் உண்டாகி, சாமானிய மக்கள் மேலும் அவதிப்படுகிறார்கள். இதெல்லாவற்றையும் விடக் கொடுமை என்னவெனில் நியாயமாகத் தொழில் துறையில் முதலீடாகி வேலை வாய்ப்புகளைப் பெருக்கியிருக்க வேண்டிய பணம், கறுப்புப் பணமாக உருமாறுவதால் உற்பத்திக்கு உதவாமல், பண வீக்கத்துக்கும் விலைவாசி உயர்வுக்கும் மட்டுமே உதவி வருவதுதான்.

அலெக்ஸாந்தர் கூறியுள்ளதை ஏற்று, புதுதில்லியில் அதிகாரத்தில் உள்ளவர்கள் வரி விதிப்பதிலும் தேர்தல் முறையிலும் சீர்திருத்தங்களைச் செய்வார்களேயானால், அந்தச் சீர்திருத்தம், பஞ்சாயத்து ராஜ்யமும் ஜவாஹர் ரோஜ்கர் யோஜனாவும் சாதிக்க முடியாததைச் சாதித்துக் காட்டும். முன்னதைச் செய்யாமல் பின்னதை மட்டும் உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டு செயல்படுவார்களேயானால் பலன், பஞ்சாயத்து பூஜ்யமாகவும் மோசடி யோஜனாவாகவுமே இருக்கும்!

---

## அமிர்தலிங்கத்தின் உயிர்த் தியாகம்

---

ஒரு வம்பு தும்புக்கும் போகாத அப்பாவி மக்கள் பலர் பயங்கரவாதத்துக்குப் பலியாகியிருக்கிறார்கள் — பஞ்சாபில், இலங்கையில், வேறு பல நாடுகளில். இந்த அக்கிரமத்தை விடக் கொடிய செயல் ஒன்று உண்டென்றால் அது, பிரச்னைகளைப் பேசித் தீர்ப்பதாகக் கூறிக் கொண்டு, ஒரு தலைவர் வீட்டுக்கு விருந்தாளியாக வந்து, அவரைச் சுட்டுக் கொல்வதுதான். இத்தகைய வஞ்சகத்துக்கு அமிர்தலிங்கமும் அவர் தோழர் யோகேசுவரனும் பலியாகி விட்டனர். தமிழ் இனத்தையே ஒரு அவமானக் காரிருள் சூழ்ந்து விட்டிருக்கிறது. விடுதலைப் புலிகள் உலகின் கண்டனத்துக்கு உள்ளாகி இருக்கிறார்கள். 'வீரம் என்பது இதுவல்ல மிஸ்டர் பிரபாகரன்; இது கோழைத்தனத்தை விடக் கேவலமானது' என்று நாமும் கண்கலங்கிக் கூறுகிறோம்.

அமிர்தலிங்கம், ஜனநாயக முறையில் போராடி, தமிழர் உரிமைகளை அடைய வேண்டும் என்று கருதிய மிதவாதத் தலைவர். விடுதலைப் புலிகளின் வன்முறை அவருக்குச் சம்மதமில்லை. ஆனாலும், 'இலங்கை அரசின் பிடிவாதம்தானே இந்த வன்முறைக்கு உரமிட்டு வளர்த்து விட்டது' என்று புலிகளைப் பற்றி அனுதாபத்துடன் தான் பேசுவார். அத்தகைய அன்பு உள்ளம், அதே விடுதலைப் புலிகளின் குண்டுகளால் துளைக்கப்பட்டுச் சிதறி விட்டது.

இந்தச் சோகம், லட்சிய வெறி கொண்ட புலிகளிடம் ஒரு மனமாற்றத்தை ஏற்படுத்தும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. குறைந்தபட்சம் பிரேமதாசாவாவது, விடுதலைப் புலிகளை நம்புவதை விட இந்திய அரசை நம்புவது மேலானது என்பதைப் புரிந்து கொண்டால்; இந்திய அரசும் குத்திக் காட்டாமல் பெருந்தன்மையுடன் நடந்து கொண்டால் அமிர்தலிங்கத்தின் உயிர்த் தியாகம் வீண்போகாது.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

* பழுத்த அனுபவம்



* நகருக்கு அழகு!





* புகழ்ந்தும் பயனில்லை



* கவலைப்பட்டு....

விட்டார். "ஜிகு ஜிகு, ஜிகு, ஜிகு" — வண்டி ஸ்டார்ட் ஆகவில்லை! "நம்ம அரசாங்க வண்டிதானே. இறங்கித் தள்ளுங்க!" என்றார், கண்டக்டர். அவ்வாறே செய்து, ஒரு மணி நேரம் தாமதமாகப் புறப்பட்டது. நல்லவேளை, ஞாபக மறதியாக இடையில் எங்கும் இஞ்சினை ஆஃப் செய்து விடாமல் வந்தார் டிரைவர்! இந்த இரட்டை வேதனை. திருவள்ளுவர் மீது ஆத்திரம் கொள்ளத் தான் செய்தது.

* **இரா. சண்முக சுந்தரம், கல்லிடைக் குறிச்சி.**

? **குரோமிகோ குறித்து....?**

! இத்தனை நீண்ட காலம் தொடர்ந்து வெளியுறவு அமைச்சராக எந்த நாட்டிலும் யாரும் இருந்திருக்க முடியாது. பல நாட்டு அதிபர்களைப் பல கால கட்டங்களில் சந்தித்துப் பழுத்த அனுபவம் பெற்றதற்குக் கிடைத்த பரிசு சோவியத் அதிபர் பதவி.

# மூட்டுவலிக்கு ஒரு பாட்டி

* **கே. குருசுப்பிரமணியன், திருவரங்கம்.**

? **பத்திரிகைக் காகித விலை உயர்வை எதிர்த்துப் பத்திரிகைகள் போராடாமல் மௌனம் சாதிப்பது ஏன்? என்ன விலையானாலும் வாசகர்கள் ஏற்றுக் கொள்வார்கள் என்பதாலா?**

! சரியாப் போச்சு! பத்திரிகையாளர் சங்கங்களும் பத்திரிகை ஆசிரியர்கள் சங்கங்களும் பலத்த எதிர்ப்புத் தெரிவித்து உள்ளன. எல்லா முக்கியமான பத்திரிகைகளும் விலை உயர்வு நியாயமற்றது என்று எழுதியுள்ளன. ஆனால் ராஜீவ் கைவிரித்து விட்டார்! அரசாங்கத்தின் உள்நோக்கம், பத்திரிகைகளுக்கு எவ்வளவு சிரமம் தர முடியுமோ தர வேண்டும் என்பதாக இருக்கும் போது யாருடைய கண்டனக் குரலும் எடுபடப் போவதில்லை. தூங்குவது போல் பாசாங்கு செய்பவரை எப்படி எழுப்புவது?

* **அ. கயல்விழி, விருத்தாசலம்.**

? **டெய்லரின் கத்தரிக்கோல், சென்ஸாரின் கத்தரிக்கோல் — என்ன வித்தியாசம்?**

! முன்னது ஆபாசத்துக்கு வழிவகுக்கக் கூடியது; பின்னது ஆபாசத்தைக் குறைக்கச் செயல்படுவது!

* **சாமா, சீர்காழி.**

? **சமீபத்தில் தங்களுக்கு ஆத்திரமூட்டிய சம்பவம்?**

! பெங்களூர் செல்ல ரயில் ரிஸர்வேஷன் கிடைக்கவில்லை. திருவள்ளுவரைத் தஞ்சமடைந்து டிக்கெட் பெற்றேன். 9.30 மணி பஸ், நிலையத்துக்கு 10.45—க்கு வந்து 11 மணிக்குப் புறப்பட்டது! இரண்டு மணி நேரம் வீணானது. பெங்களூரிலிருந்து சென்னை திரும்ப மறுபடி திருவள்ளுவர் டிக்கெட் எடுத்தாகி விட்டது. ஒன்பது மணி பஸ்ஸில் டிரைவரும் ஏறி அமர்ந்து

* **ஆர். சுப்பராவ், திருக்கோவலூர்.**

? **மூட்டு வலிக்கு ஒரு பாட்டி வைத்தியம் கூறுங்களேன்?**

! 'இடது காலில் மூட்டு வலி தாங்கவில்லை' என்று ஒரு பாட்டி வைத்தியரிடம் போனாள். 'வயதாகி விட்டதல்லவா, அது தான்' என்று கூறியபடியே டாக்டர் மருந்துச் சீட்டு எழுதினார். 'அதை எப்படி ஒப்புக்க முடியும்? வலது காலுக்கும் அதே வயசு தானே ஆச்சு?' என்று கேட்டாள் பாட்டி! எப்படி, மூட்டுவலிக்குப் பாட்டி வைத்தியம்!

* **டி. சீனிவாசன், சென்னை.**

? **இ. காங்கிரஸ் ஆட்சியை அகற்றுவது அவசியம் என்கிறாரே, ஜோதிபாசு?**

! அடடா! அப்போ, ராஜீவ் காந்தி இவரைப் புகழ்ந்து பேசியும் பயனில்லை என்று சொல்லுங்கள்!

* **விக்கிரம வெங்கடேசன், திருக்கோவிலூர்.**

? **கிரைம் இலக்கியம் வீழ்ச்சி அடைந்து உள்ளதே?**

! கிரைம் கதைகள் என்று வேணுமானால் கூறுங்கள். கிரைம் இலக்கியம் என்பது மேல் நாடுகள் போல இங்கு இனிமேல்தான் உருவாக வேண்டும். நிற்க, கிரைம், வீழ்ச்சி அடையவில்லையே, மிஸ்டர் வெங்கடேசன்!

* **துரை முருகானந்தம், திருப்பாச்சேத்தி.**

? **சமீபத்தில் நீங்கள் ட. வி. யில் பார்த்து ரசித்த நிகழ்ச்சி?**

! மார்ட்டினா — ஸ்டெஃபி கிராஃப் மோதல்; எட்பர்க் — பெக்கர் மோதல் — இதை விடச் சுவாரஸ்யமானதாக வேறு எதைக் கூற முடியும்! வென்றவர் இருவருமே ஜெர்மானியர் என்பது அதிசயம்தான், இல்லையா!

* அ. ஜமால் மொய்தீன், செங்குன்றம்.*

? ஒரு புறம் நகரைச் சுத்தப்படுத்த வேண்டும் என அறிவிக்கும் தமிழக அரசு, மறு புறம் கலைஞரே கூட்டிய பொதுக் குழுவுக்கு அவரையே வரவேற்று ஒட்டப்பட்ட சுவரொட்டிகளை அனுமதிக்கிறதே?

! ஒருவேளை கலைஞரை வரவேற்கும் போஸ்டர்களும் கலைஞரின் மனைவிக்கு வாழ்த்துத் தெரிவிக்கும் நீண்ட போஸ்டர்களும் நகருக்கு அழகூட்டுவதாக அரசு எண்ணியிருக்கலாம்!

* என். பெனிட்டோகுமார், திருப்பூர்.

? காளிமுத்து என்ன செய்து கொண்டிருக்கிறார்?

# வக்கியம்?

! எங்கே, வீரப்பன் வந்து விடுவாரோ என்று கவலைப்பட்டுக் கன்னத்தில் கை வைத்துக் கொண்டிருக்கிறார்!

* அ. முஸ்தபா, தக்கோலம்.

? அ. தி. மு. க. தலைமைப் பொறுப்பை உம்மிடம் கொடுத்தால் ஏற்பீரா?

! வீடியோ கேசட் சப்ளை மூலம் கிடைத்த நெருக்கம் எனக்கு இல்லை; ஆர்ப்பாட்ட அரசியல் நடத்தும் முன்னாள் அரசு அதிகாரியின் நட்பு எனக்கில்லை. உடல் ரீதியிலோ, மன ரீதியிலோ பாதிப்பு ஏதுமில்லை. கண்ணாமூச்சி ஆட்டம் ஆடப் பிடிக்கவுமில்லை. ஆக, எந்தத் தகுதியின் அடிப்படையில் தலைமைப் பொறுப்பை ஏற்பது?

* முகமது ஹுசைன், சென்னை.

? முதல்வரை ஒரேயடியாக 'ஞானி' என்று வர்ணித்திருக்கிறதே தலையங்கம்? கல்கிக்கு இது தேவைதானா?

! 1. ஞானி என்று கூறவில்லை; ஞானி என்ற நிலைக்கு உயர அவர் முயற்சி செய்து கொண்டிருப்பதாகத்தான் கூறுகிறது. வழுக்குப் பாறைகளைக் குறித்து எச்சரிக்கவும் செய்கிறது. 2. ஒருவரது நற்செயலையும் சொல்லையும் பாராட்டுகிற துணிவு இருந்தால்தான் அவர் செய்கிற தவறுகளைச் சுட்டிக் காட்டும் துணிவையும் பெற இயலும். 3. ஒருவரது நற்பணிகளைப் பாராட்டினால்தான் அவருக்குத் தொடர்ந்து நல்லன செய்து நற்பெயர் வாங்க வேண்டும் என்ற ஆர்வம் பிறக்கும். 4. நல்லதைத் தட்டிக் கொடுப்பதும் தீயதை தட்டிக் கேட்பதும்தான் கல்கியின் பாரம்பரியம்.

* எம். என். எடிசன், நெல்லை.

? நான் மக்கள் மத்தியில் பிரபலமடைய என்ன செய்ய வேண்டும்?

! முதலில் சினிமாவில் சேர வேண்டும். அங்கு சற்றுப் பிரபலமான பிறகு 'தொபுகூர்' என்று அரசியலில் குதிக்க வேண்டும்! இந்தக் காம்பினேஷன்தான் இன்று விலை போகிறது!

* ரூ. 20 பரிசு பெறுபவர்:
அ. ஜமால் மொய்தீன்,
3—ஏ, தர்கா தெரு,
செங்குன்றம்,
சென்னை — 52.



* இருவரும்.....



* ...ஜெர்மானியர்!

# புது டவுசர்

அன்று ஏனோ வானம் வழக்கத்துக்கு மாறாக மேகமூட்டத்துடன் காணப்பட்டது. மழைத்துளி வரலாம் என்று நினைத்த பூவாயி, கோழிகளைக் கூட்டில் அடைக்க எண்ணி, கை நிறையச் சோளத்தை அள்ளிப் போட்டாள்.

மொலுமொலுவென்று குஞ்சுகள் கொத்திப் பொறுக்க ஆரம்பித்தன. மொத்தம் பத்து குஞ்சுகள். ஒவ்வொன்றும் 'பத்து ரூபாய்த் தரத்தில்' குணுக்கென்று திடகாத்திரமாக இருந்தன.

'இதுகளை வித்துப் பையனுக்கு டவுசர் ஒண்ணு எடுக்கோணும். புள்ளைக்குப் பாவாடைத் துணி வாங்கோணும். மீதிப் பணத்துக்குக் குருணை அரிசி, எண்ணெய்த் தண்ணி, கடுகு செலவு வாங்கோணும்' தனது தீர்மானத்தை மீண்டும் மனத்தில் ஸ்திரப்படுத்திக் கொண்டாள் பூவாயி.

வேலிப்படல் திறக்கும் சப்தம் கேட்டது. புர்ரென்று கற்பனை மோட்டார் ஓட்டிக் கொண்டு அவள் மகன் சின்னராசு ஓடி வந்தான். காலடிச் சப்தம் கேட்டு, குஞ்சுகள் சிதறியோடின.

"டேலேய்... மொள்ள வாடா."

"அம்மா! ஐசுக்காரன் வந்திருக்கிறான். பாலு ஐசு வாங்க காசு குடு."

"ஆமா... நம்ம பொளைப்புக்குப் பாலு ஐஸ்தான் கொறைச்சலாக் கெடக்குது. போடா அக்கட்டாலே!"

அவன் அழுவதற்கு ஆயத்தமானான். மெள்ள பேச்சை மாற்றினாள் பூவாயி.

"கண்ணு! உனக்குப் புது டவுசர் வேணு மாடா?"

"வேணும். வேணும்."

"நான் சொல்றபடி கேட்டாத்தான் நாளை மக்கா நாள் வெல்லம்பட்டி சந்தைக்கு உன்னைக் கூட்டிட்டுப் போய், துணி எடுத்துத் தருவேன்."

"என்ன செய்யோணும் சொல்லு."

"வடக்குத் தெருவு கோழி யாவாரியைப் போய்க் கூட்டிட்டு வர்றியா?"

"யாரும்மா அது?"

"அதாண்டா உன் கூடப் படிக்கிறானே நாச்சி, அவனோட அப்பன்காரன்தான்."

"இப்பவே கூட்டியாரட்டா?"

சற்று யோசித்துவிட்டுச் சரி என்றாள்.

திண்ணையில் உட்கார்ந்திருந்த அவள் புருஷன் சாரங்கன். "அடியேய்! மூக்கடை முனுசாமி ரெண்டு கோழிக் குஞ்சு கேட்டாருடி" என்றான்.

"நான் பிச்சுப் பிச்சுத் தரமாட்டேன்."

"அந்த ஆளு தர்ற காசு சேராதா?"

"அவன் ஆயிரம் அழுத்தம் பேசுவான். இன்னைக்குத் தர்றேன், நாளைக்குத் தர்றேன்னு சவாப்புச் சொல்லுவான். மொத்தமா யாவாரிக்குக் கொடுத்தா கை மேலே காசு தருவான்."

"ஆமாடி. அதுவும் சரிதான்" என்றான் சாரங்கன்.

அம்மிணி! அம்மிணியோவ்!

"யாரு?" என்றாள் பூவாயி.

"நான்தான் கோழிக்காரன் வந்திருக்கிறேன். குஞ்சுகளை விலைக்குத் தர்றீங்களா?"

"ஆமாம் பொன்னா."

கூட்டிலிருந்த குஞ்சு ஒன்றைப் பிடித்துத் தூக்கி, கையால் உத்தேச எடை பார்த்தான் வியாபாரி.

"எத்தனை குஞ்சு தர்றீங்க?"

"பத்து குஞ்சு. ஒண்ணு பத்து ரூவா."

"விலையை உடைச்சுச் சொல்லுங்க அம்மிணி"

"விலை குறைக்க முடியாது யாவாரி. முனை முறியாம நூறு ரூவா தந்திடணும்."

"இப்படிச் சொன்னா என்ன பண்றது அம்மிணி? பஸ்ஸிலே ஒரு குஞ்சுக்கு எட்டணா லக்கேஜ் கேக்கறான். சந்தையிலே குஞ்சு ஒண்ணுக்கு எட்டணா சுங்கம் குடுக்கோணும். பத்து குஞ்சுக்குப் பத்து ரூவா செலவு இருக்குது. அதனாலே விலையை உடைச்சுச் சொல்லுங்க."

"விலை குறையாது பொன்னா."

"அப்படியானால் எனக்கு வேண்டாம்." என்று அவன் திரும்பிப் போய் விட்டான். பேரம் பேச அவன் மீண்டும் வருவான் என்று பூவாயி அறிவாள்.

பொழுது சாயும் நேரத்தில் பூவாயி வீட்டிற்குச் சாந்தாமணி வந்தாள்.

"என்னடி குட்டி?"

"அக்கோவ்! ஊசிப்பில்லு காட்டிலே கருது வெட்டக் கூலியாள் வேணுமாம்.

சிவதர்ஷிணி

ஆறு ரூவா கூலியாம். விடியக்காலம் போனா, பழைய சோத்துக்கு வந்திடலாம். நீ வர்றியா?''

''வர்றேண்டி'' என்றாள் பூவாயி.

''தலைவாசல்கிட்டே கொத்துக்காரர் நிக்கிறாரு. போய்க் கேளு.''

பூவாயி வருவதைக் கண்ட கொத்துக்காரர் ''என்ன புள்ளே?'' என்றார்.

''நானும் கருது வெட்ட வாரனுங்க..''

''ஊசிப் பில்லு காட்டிலே மாமியாத்தா தோட்டத்துக்கு வந்திடு. ஆனா ஒண்ணு! காய் கசும்பு எதையும் புடுங்கி மடியிலே போட்டுக்காதிங்க. அவ சரியான வாயாடி! சண்டைக்குப் பிடிச்சுக்குவா.''

''நாங்க தொட மாட்டோமுங்க.''

''சரி வந்திரு'' என்று அவளையும் கூலிக்குச் சேர்த்துக் கொண்டார். அவரிடமிருந்து விடைபெற்றுக் கிளம்பும் போது வானம் மங்கி ஒளி குறையலாயிற்று. காற்றில் புழுதி கிளம்பிச் சுழன்றடித்தது. மரம் மட்டைகள் அந்த ஆவேசக் காற்றில் அலைபட்டன.

எதிரே வந்தவளிடம் ''என்னடி இருமாத்தா. கோடைக் காத்து இப்பிடி பிச்சுப் புடுங்குது?'' என்றாள் திகிலுடன்.

''கொரகம் பேய்க் காத்து வீசுது'' என்றாள் அவள்.

குழந்தைகள் வீட்டில் தனியாக இருப்பார்களே என்று வீடு நோக்கி ஓடி வந்த






பங்கு பெறுவோர்:

ஜெயந்தி நடராஜன் எம். பி.,
டபிள்யூ. ஆர். வரதராஜன் எம். எல். ஏ.

பூவாயி வேலிப்படலைத் திறந்தவள் "மாகாளியாத்தா....!" என்று அலறினாள்.

காற்றின் வேகம் தாங்காமல் அவளது வீட்டுக் கூரை சரிந்து போய் விட, குழந்தைகள் முற்றத்தில் பயந்து ஒடுங்கி நின்று அழுது கொண்டிருந்தன.

பூவாயி கண்ணில் வழிந்த கண்ணீரைப் பரிவுடன் துடைத்தான் அவள் கணவன் சாரங்கன். கூரையில்லாத வீட்டினுள் நிலவொளி மங்கலாக விழுந்திருந்தது. பழைய சாக்கு ஒன்றை விரித்துக் குழந்தைகள் படுக்க வைக்கப்பட்டிருந்தனர்.

"மச்சான், நாளைக்கு மரக்கடைக்குப் போய்த் தென்னங் கிடுகு வாங்கிட்டு வாங்க. ரெண்டு மூங்கில் மரமும் வாங்கிட்டு வாங்க. வீட்டை மேஞ்சு போடலாம். கூரையில்லாம எப்படி குடியிருக்கறது?"

சாரங்கன் பெருமூச்சு விட்டான்.

தூக்கத்தில் புரண்டு படுத்த பையன் கை நீட்டித் துழாவி அருகில் தாயைக் காணோம் என்றதும் தூக்கக் கலக்கத்துடன் "அம்மா!" என்றான்.

"என்னடா ராசா... நான் பக்கத்திலே தான் இருக்கிறேன். தூங்கு."

"அம்மா, எனக்கு டவுசர் எப்போ நீ வாங்கித் தருவே?"

"கோழி அடுத்த கும்பு முட்டை வைச்சுக் குஞ்சு பொரிக்கட்டும்டா கண்ணு. நல்ல டவுசரா எடுத்துத் தர்றேன்."

"நீ பொய் சொல்றே. எனக்கு இப்பவே டவுசர் வேணும்" என்று சிணுங்கியவனைத் தட்டித் தட்டித் தூங்க வைத்தபடியே கணவனிடம் சொன்னாள்.

"மச்சான்! நாளைக்குக் கோழிக்காரனைக் கூப்பிட்டு, வந்த விலைக்குக் குஞ்சுகளை வித்துப் பணத்தை வாங்கி, தென்னங் கிடுகு, மூங்கில் வாங்கிட்டு வந்திடுங்க."

"அம்மா.... எனக்கு டவுசரு" என்றான் பையன்.

"அடுத்த கும்பிலே எடுக்கலாம் கண்ணு" என்று அழுகையுடன் ஆறுதல் சொன்னாள் பூவாயி.

---

"கார்டிலே ஒரு வார்த்தை கூட எழுதாமல் யாரோ அனுப்பியிருக்காங்களே?"

"இது பிறந்த வீட்டுக்குப் போன என் மனைவியிடமிருந்து வருது. எனக்கும் அவளுக்கும் பத்து நாளா பேச்சு வார்த்தை இல்லை!"

— சுரம்.





கடிதம் எழுதுபவன்: அப்புறம் என்ன எழுதணும்?

கிராம வாசி: கையெழுத்து கோழி கிறுக்கலாக இருப்பதற்கு மன்னிக்கவும்னு எழுதுங்க.

— இடையகோட்டை ஆசாத்.

---

"சீக்கிரம் உங்க தங்கைக்குக் கல்யாணம் பண்ண ஏற்பாடு செய்யுங்க, அத்தான்!"

"ஏன்! அவள், காதல் கீதல் என்று... அதாவது...?"

"அதெல்லாமில்லை! ஒரே சமயத்துலே என்னாலே மாமியாரோடும் நாத்தனாரோடும் சண்டை போட முடியலே!"

— க



# சூழ்நிலை மயக்கங்கள்

ஸ்வரம்

ஆபீஸ் முகவரிக்கு வந்த அந்தக் கடிதம் அவனைச் சிறிதும் பாதிக்கவில்லை. அதன் ஒவ்வொரு வரியும் அவனுக்குப் புதிது புதிதாகச் செய்திகளைச் சொன்னாலும், அவன் முகத்தில் எவ்வித சலனமும் ஏற்படவில்லை:

அன்புள்ள அரவிந்த்,

எத்தனையோ முறை நேரில் சந்திக்கும் போது, எதற்காகக் கடிதம் எழுதியிருக்கிறாள் என்று வியக்கிறாயா? இக் கடிதத்தில் நான் எழுதியிருப்பதை உன்னிடம் நேரில் சொல்வதற்கு வாய்ப்பும், நேரமும் அதிகமாக இருந்தாலும், மனவலிமை எனக்கு இல்லை. அதனால்தான் இந்தக் கடிதம். நாம் இருவரும் சிறு வயதிலிருந்தே ஒரே பள்ளியில் படித்து ஒன்றாகப் பழகினோம். நீ அடிக்கடி 'எனக்குக் கூடப் பிறந்தவர்கள் யாரும் இல்லாத குறையை நீ என் உடன் பிறவாத சகோதரியாகத் தீர்த்து வைக்கிறாய்' என்று கூறுவாய். நானும் உன்னை எனது மற்றோர் அண்ணனாகப் பார்த்து வந்தேன்.

ஆனால் சில வாரங்களாக என்னிடம் ஒரு மாற்றம் ஏற்பட்டுள்ளது... அது குழப்பமா, தெளிவா என்று எனக்குப் புரியவில்லை. உன்னைப் பார்க்கும் போதெல்லாம் ஓடிவந்து உன்னை முத்தமிட வேண்டும் என்றும், மேலும் ஏதேதோ சகோதரப் பாசம் அல்லாத உணர்வுகளும் என்னுள் எழுகின்றன. அவை ஏதோ காதலர்களுக்கிடையில், கணவன் மனைவிக்கிடையில் தோன்றும் மன எழுச்சியாகவே நான் உணர்கிறேன்.

உனக்கும், எனக்குத் தோன்றியுள்ளது போன்ற எண்ணங்கள், அபிலாஷைகள் இருக்கும் என்று நினைக்கிறேன். நாம் ஏன் திருமணம் செய்து கொள்ளக் கூடாது?

அண்மையில் கூட ஒரு சிறுகதையில் படித்தேன்.... இருவர் நம் போலவே சகோதரத்துவத்துடன் பழகுகிறார்கள். உண்மையில் அவர்கள் உள்ளுக்குள் ஒருவரையொருவர் ஏமாற்றிக் கொள்கிறார்கள். அவர்கள் இருவருக்கும் தனித் தனியே திருமணம் நடந்த பிறகு உண்மை தெரிந்து இருவரது வாழ்க்கையும் பாழாகிறது.

அது போன்ற ஒரு போலி வாழ்க்கையை நாம் ஏன் கைக்கொள்ள வேண்டும்?

மனந்திறந்த உன் முடிவுக்கு ஆவலுடன் காத்திருக்கிறேன்.

உன் அன்பு,<br>
சௌம்யா.

லேசான புன்னகையுடன் கடிதத்தை மடித்துத் தன்பின் பாக்கட்டில் வைத்துக் கொண்டு தன் வேலைகளில் முனைப்பானான் அரவிந்த்.

'சோ'வென்ற மழையில் மெல்ல ஸ்கூட்டரை விட்டிறங்கி ஸன்ஷேட்டின் கீழ் தள்ளி ஸ்டாண்ட் போட்டான் அரவிந்த். ரெயின் கோட்டைக் கழற்றி வாசலில் இருந்த ஆணியில் மாட்டி விட்டு, ஹெல்மட்டைக் கையில் எடுத்துக் கொண்டு காலணிகளை விடுவித்து, உள்ளே நுழைந்தான்.

அவன் நடந்துவந்த காலடி ஓசை கேட்டு ஹாலில் எம்பராய்டரி செய்து கொண்டிருந்த சௌம்யா திரும்பினாள்.

"அரவிந்த்...! வா.... வா..... கேட் திறக்கிற சத்தமே கேட்கலையே..." என்ற சௌம்யாவின் முகத்தில் லேசான கலவரம் மூண்டிருந்தது.

"வெளியில் மழை பெய்யுதுல்லே..... சப்தத்தில் காதில் விழுந்திருக்காது....." என்று புன்சிரிப்புடன் பதில் சொல்லி

விட்டு அவளுக்கு எதிரே இருந்த சோபாவில் அமர்ந்து தலையைக் கோதிக் கொண்டான். அவனது ஃபுல்ஹேண்ட் சட்டையின் இரண்டு கைகளும் நனைந்திருந்தன.

"என்ன அரவிந்த்.... சட்டையெல்லாம் நனைஞ்சிருக்கு...... அண்ணா சட்டையைக் கொண்டு வரேன்.... மாத்திக்கோ...." என்று எழ முற்பட்டாள்.

"வேண்டாம்.... வேண்டாம்.... கைப் பக்கம்தானே நனைஞ்சிருக்கு.... கொஞ்ச நேரத்தில் காஞ்சுடும்.... வீட்டை விட்டுக் கிளம்பும் போதே மழை வர்றாமாதிரி இருந்தது... ரெயின் கோட் கொண்டு வந்தது நல்லதாப் போச்சு.... ஆமாம்.... எங்கே..... யாரையும் காணோம்.....?"

"அம்மா கோயிலுக்குக் கதா காலட்சேபம்னு போனா... மழை விட்டப்புறம் தான் வருவா.... அண்ணா கேம்ப் போயிருக்கான்.... உன் கிட்ட சொல்லலை...?"

"ம்.... சொன்னான்.... சொன்னான்... நான்தான் மறந்துட்டேன்...."

ஜில்லென்று குளிர்க்காற்று வீசியது.

"உன் லெட்டரைக் காலம்பற பார்த்தேன்...."

அவள் விழிகள் அகலமாயின. மேல் பற்கள் இரண்டால் கீழ் உதட்டைக் கடித்துக் கொண்டாள். விரல்கள் லேசான நடுக்கங்களுடன் எம்பராய்டரி துணியை உருட்டிக் கொண்டிருந்தன. கண்களைக் கீழே தாழ்த்தி அரவிந்த் அடுத்துச் சொல்லப் போவதற்காகக் காத்திருந்தாள்.

தீர்க்கமான பார்வை ஒன்றை அவள் மீது செலுத்தினான். பின்பு இலேசான பெருமூச்சுடன் ஆரம்பித்தான்.

"அதைப் பத்திப் பேசறத்துக்கு முன்னாடி, என்னைப்புத்தி உனக்குத் தெரிந்த விஷயங்கள் சிலதைக் கொஞ்சம் பேசலாம்னு நினைக்கிறேன்...

சின்ன வயசிலேயே அம்மாவை இழந்த எனக்கு அப்பாவால் அன்பை ஊட்டி வளர்க்க முடியலே. சித்தி கொடுமை செய்வான்னு அவர் மறுகல்யாணம் செஞ்சுக்காம இருந்தாலும் அவருக்கு அவரோட வாணிபம்தான் முக்கியமா இருந்தது. இருக்குது.... அந்த சமயத்தில் உங்க குடும்பத்தோட அன்பும் ஆதரவும் எனக்குக் கிடைச்சுது. அக்காவாகவும், தங்கையாகவும், அண்ணனாகவும், தம்பியாகவும், அம்மாவாகவும் ஏன் அப்பாவாகவும் கூட நீங்க கிடைச்சீங்க, வழிகாட்டினீங்க.... ஒரே சமயத்தில் இரண்டு இடங்களில் இருந்து எனக்கு அப்பாயிண்ட்மென்ட் ஆர்டர் வந்து நான் எதில் சேருவது என்று தவித்த போது, நீ சொன்னபடியே நான் ஒரு பாதையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன். ஒரு முறை கார் ஆக்ஸிடெண்டில் இரத்தமெல்லாம் இழந்து நான் உணர்விழந்து கிடந்த போது, உன் அண்ணனே பல இடங்களில் அலைந்து எனக்கு இரத்தம் சேகரித்ததும், நீ இரவு பகலாகக் கண்விழித்து என் அருகிலேயே தவிப்புடன் பணிவிடை செய்ததையும் எல்லாம் என்னால் மறக்க முடியுமா....

"அம்மாதிரி சகோதரப் பாசத்துக்கு இலக்கணமாக நீங்களெல்லாம் நடந்து கொண்டிருக்கும் போது என்னிடம் வேறு விதமான உணர்வுகள் தோன்ற வாய்ப்பிருக்குமா என்று எண்ணிப் பார்....."

திக்பிரமை பிடித்தவள் போல் அமர்ந்திருந்தாள் சௌம்யா. சற்றே உணர்வுக்கு வந்து,

"..... எனக்கு ஏற்பட்டிருக்கும் எண்ணங்கள்.... உணர்ச்சிகள்...." — தடுமாறினாள்.

"நீ நன்றாகவே குழம்பியிருக்கிறாய்.... எண்ணங்களில் இருந்து தோன்றுபவை தானே உணர்ச்சிகள். எண்ணங்கள் மாறும் போது உணர்ச்சிகளும் மாறத்தானே செய்யும்.... எனக்கென்னவோ இந்த எழுத்தாளர்கள் முழுமையான வாழ்க்கைத் தத்துவம் கொண்டிருப்பதாகத் தெரியவில்லை. சில காட்சிகளைச் சித்திரங்களாக்குகின்ற, சில சலனங்களை மன ஏட்டில் பதிவு செய்கின்ற ரசவாத வித்தைகளை மட்டுமே தெரிந்து வைத்திருக்கிறார்கள் என்று நினைக்கிறேன்.... நீ படித்த கதையையே விட்டு விடுவோம் சௌம்யா.... 'நான் அடைந்தது குழப்பமா... தெளிவா?' என்று எழுதியிருக்கிறாயே.... உனக்கு ஏற்பட்டது தெளிவாயிருந்தால் 'தெளிவா.... குழப்பமா?' என்ற குழப்பம் உனக்கு எ ப் ப டி ஏற்பட்டிருக்கும்....? வீட்டுக்கு இரண்டு பேர் கதை எழுதும் இந்த காலத்தில், சூன்யத்திலிருந்து பிறக்கும் அவர்களின் எழுத்துக்களை நடைமுறையோடு ஒப்பிட்டுக் குழம்பியிருக்கிறாய்..."

சௌம்யா அவன் கண்களையே பார்த்துக் கொண்டிருந்தாள். வெளியில் பேய் மழை ஓய்ந்து சிறு தூறல்கள் மட்டும் விழுந்து கொண்டிருந்தன. அரவிந்த் தொடர்ந்தான்.

"சிற்சில சூழ்நிலைகளில் சிற்சில எண்ணங்கள் தோன்றுவது இயற்கைதான். எண்ணங்கள் என்பதைவிட மயக்கங்கள் என்றால் இன்னும் பொருத்தமாக இருக்கும்.

எதிரொலி நிகழ்ச்சியில்......

"இப்பொழுதெல்லாம் தமிழ்ச் செய்தியில் கூடத்தமிழகச் செய்திகள் இடம் பெறுவதில்லையே, ஏன்?"

"நாள் தோறும் சென்னை, கோவை, திருச்சி, சேலம், மதுரை நகர வெப்ப நிலை காட்டப்படுகிறதே!"

— தோபஞ்சு.



அவை சூழ்நிலைகள் மாறும் போது விலகி விடும். அப்படியே விலகா விட்டாலும், லேசாகச் சிந்தித்தால் நிஜமெதுவோ அதுவே மனத்தில் நிற்கும். உன்னைப் பொறுத்த மட்டில் சூழ்நிலைகள் விலகவில்லையா... அல்லது நீ சிந்தனை செய்யவில்லையா என்று என்னால் யூகிக்க முடியவில்லை..."

ஆர்வத்துடன் அவளைப் பார்த்தான்.

''சூழ்நிலை மாறி விட்டது அரவிந்த்... அந்த லெட்டரை உன் மனசிலிருந்தே கிழிச்சுப்போட்டுடு'' என்று சொல்லிக் கொண்டே எழுந்தவளின் கண்களில் நீர் திரை யிட்டிருந்தது. வெளியில் மழை முழுதுமாக ஓய்ந்திருந்தது.





# பம்ப் அடிப்பதால்

ஒரு நாள் விட்டு ஒரு நாள் காலை நாலு மணிக்கு எழுந்து 'பம்ப்' அடிப்பதால் எவ்வளவு நன்மைகள்! அலுத்துக் கொள்ளாமல் உற்சாகமாக அடியுங்கள், 'பம்ப்'!

கருத்து: சில்மிஷா.
படங்கள்: அரஸ்



○ ஒரு பக்கெட் தண்ணீர் அடிப்பதற்குள் நீலம், சிவப்பு, ஊதா, பிரவுன் என்று கலர் கலராக வெளிப்படுவதைப் பார்த்து inspire ஆகி, நீங்கள் இந்திய ஒருமைப்பாட்டுக் கவிதை எழுதி தூர்தர்ஷனுக்கோ அ. இ. ரே.வுக்கோ தேச பக்திப் பாடல் பிரிவுக்கு அனுப்பலாம்!



○ ரேடியோ சான்ஸே கிடைக்கா விட்டாலும் தினமும் நாலரை மணிக்கு எழுந்து உங்கள் பிராணனை வாங்கும் பக்கத்து வீட்டுப் பாகவதரின் 'சாதக' அலறலை ஒரு நாள் விட்டு ஒருநாள் தான் கேட்க வேண்டியிருக்கும். (மற்ற நாட்களில் அவரைப் 'பம்ப்' அடிக்கச் சொல்லிப் பாகவதர் மாமி உச்ச ஸ்தாயி யில் போடும் ஓர் அதட்டலை மட்டும் கேட்டால் போதும்)





○ வழக்கமாக ஆறு மணிக்கு எழுந்து கொள்வதற்குப் பதிலாக நாலு மணிக்கே எழுந்து கொள்வதால் இரண்டு மணி நேரம் ஃபான் சுற்றுவது குறைந்து எலெக்ட்ரிஸிடி பில் குறையுமே!

# பலன் உண்டு!



○ பையன் ராத்திரி ட்ரை பண்ணி விடை வராத கணக்குகளைத் தூக்கிக் கொண்டு உங்களிடம் வரும்போது வீராப்புடன் முயன்று பார்த்து 'பேஸ்' அடிக்காமல், 'நான் பம்ப் அடிக்கனும்'னு சொல்லிக் கழண்டுக்கலாம்.



உங்கள் பெண்ணுக்கும் பின் வீட்டில் அடிக்கும் பாங்க் வேலையிலுள்ள ருக்கும் 'லவ்' ஏற்பட்டு உங்க பெண் யாணம்' வரதட்சணை இல்லாம 'ஜாம் ஜாம்'னு நடக்கக் கூடும்!



○ மணக்க மணக்க வரும் தண்ணீரோடு உறவாடின பழக்கத்துல, பல்லவனில் கூவம் ரூட்டில் போகும் போது மூக்கையும் மூடிக் கொண்டு கம்பியையும் பிடித்துக் கொண்டு திண்டாடாமல் ஃப்ரீயாக மூச்சு விட்டுக் கொண்டே போகலாம்.

○ அரசியல்வாதிகளுக்குப் பெரிய ஆதாயம்: அடுத்த தேர்தலின் போது, தாய்க்குலத்துக்கு இலவச பம்பு வலி நிவாரணி தைலம் வழங்குவதாக வாக்குறுதி தந்து தாய்க்குல வோட்டுக்களை அள்ளிக் கொள்வதோடு தைலத் தயாரிப்பாளரிடம் கமிஷனும் அள்ளலாம்.




பானி மிக்ஸ்
உடனடியாகத் தயாரிக்கக்கூடிய பாரிட்ஜ்.
தானியங்கள், பழங்கள்,
முந்திரி கலந்த ஆகாரம்.
பானி மிக்ஸ் கோதுமை, சோளம், அரிசி, தேங்காய், ஆப்பிள், பேரிச்சை, திராட்சை மற்றும் முந்திரி போன்ற வையிலான ஊட்டமிகு, எளிதில் ஜீரணிக்கக்கூடிய பாரிட்ஜ் ஆகாரம். குடும்பத்தினருக்கு காலைச் சிற்றுண்டிக்கும் மாலையில் பள்ளி அல்லது அலுவலக வேலைகளுக்குப் பின் அளிக்கவும் உகந்தது. முதியோருக்கும் நோயிலிருந்து குணம் அடைவோர்க்கும் ஏற்ற உணவு.
Bonny Mix
நிமிடங்களில் தயார்
பானி மிக்ஸை விரைவாகவும், எளிதாகவும் தயாரிக்கலாம்.
1
கிண்ணத்தில் தேவையான பானி மிக்ஸை எடுக்கவும்.
2
அதோடு முன்னமே கொதித்த பாலை போதுமான அளவு மெதுவாகச் சேர்க்கவும்.
3
மிருதுவான கிரீம் போன்ற பாரிட்ஜ் ஆகாரம் பெற மெதுவாகக் கலக்கவும்.
4
சுவையான ஒவ்வொரு ஸ்பூன் பாரிட்ஜ் உணவையும் உங்கள் குடும்பத்தினர் சுவைத்து மகிழ்வார்கள்.
பானி மிக்ஸ்
இந்தியாவிலேயே முதன் முறையாக!
வழங்குவோர்: க்ளின்டியா லிமிடெட் (முன்னாள் க்ளாக்ஸோ)
குடும்ப உணவுகளில் நம்பிக்கைக்கு உகந்த பெயர்

# நாய்களுக்குக் காப்பகம்!

வேலைக்குப் போகும் தாய்மார்களுக்கு உதவ இங்கு 'கிரெஷ்' அமைப்புக்கள் இருப்பது போல ஜப்பானில் நாய்களுக்கு 'கிரெஷ்' உள்ளது! அந்நாட்டில் நைட் கிளப்புகளிலும் மஸாஜ் பார்லர் போன்றவற்றிலும் வேலை பார்க்கும் பெண்கள் மிகுதி. டோக்கியோவின் கின்ஸா பகுதியில் மட்டும் அப்படிப்பட்ட 10,000 பெண்கள் உள்ளனர். இவர்களில் மிகப் பெரும்பாலோர் வாழ்க்கையின் தனிமையை விரட்ட ஒரு நாய் அல்லது பூனையைச் செல்லம் கொடுத்து வளர்க்கின்றனர். இரவில் இவற்றை வீட்டில் வைத்துப் பூட்டிவிட்டுப் போக மனமின்றி, பராமரிப்பு நிலையங்களில் விட்டுச் செல்கின்றனர். இந்தக் காப்பகங்களை நடத்துவோருக்கு நல்ல வரும்படி! ஓர் இரவுக்கு ஒரு நாய்க்கு அறுநூறு ரூபாய்க்கு மேல் வசூலிக்கிறார்கள்!

— இன்டர்லெக்ட்.

## ஊனமுற்றவருக்கு ஒலிம்பிக்!

முதுகுத் தண்டில் அடிபட்டுக் கால்களின் அல்லது கைகளின் (அல்லது இரண்டுமே) இயக்கத்தை இழந்தவர்களுக்கு என்று ஒரு கேந்திரம் இயங்குகிறது பிரிட்டனில். அதில் மருத்துவச் சிகிச்சை அளிப்பது தவிர, சுயச் சார்புடன் வாழ ஊக்கமளித்து, பயிற்சிகளும் அளிக்கிறார்கள். கால்களின் இயக்கத்தை இழந்தவர்கள் சக்கர நாற்காலி ரேஸில் பங்கு கொள்வதைப் படத்தில்



காணலாம். இத்தகைய ஊனமுற்றவர்களுக்கு என்று தனியே ஓர் ஒலிம்பிக்ஸ், சர்வதேச ஒலிம்பிக்ஸ் நடக்கும் போதே — அதன் ஓர் அங்கமாக — ஒவ்வொரு தடவையும் நடக்கிறது.

— லண்டன் பிரஸ் ஸர்விஸ்

## கார்கள் தயாரிக்கும் ரோபோக்கள்

மே. ஜெர்மனியில் கார்களை மனிதர்கள் தயாரிப்பதில்லை. ரோபோக்கள்தான் உருவாக்குகின்றன! கார்கள் நகர்ந்து கொண்டே இருக்க, ஒவ்வொரு நிலையிலும் ரோபோ கரங்கள் இயங்கி, காரின் சில பகுதிகளைச் சேர்த்துப் பற்ற வைத்து, அல்லது முடுக்கி மேலே அனுப்பும். படத்தில்,



ஃபோக்ஸ் வாகன் மோட்டார் கார் தொழிலகத்தில் ரோபோக்கள் படு சுறுசுறுப்பாக இயங்குவதைக் காணலாம்.

— ஜெர்மன் ஃபீச்சர்ஸ்

## ஐ. எஸ். ஐ. முத்திரை!

தரமான பொருளெனில் ஐ. எஸ். ஐ. முத்திரை இருக்கும் என எதிர்பார்ப்போம். இப்போது அரசு ஒரு சட்டம் இயற்றியுள்ளது. இதன்படி ஐ. எஸ். ஐ. முத்திரை இல்லாமல் சில மின்சாரச் சாதனங்களை உற்பத்தி செய்யவே கூடாது. இஸ்திரிப் பெட்டி, அடுப்பு, மூழ்குகிற தண்ணீர் ஹீட்டர், ஸ்விட்சுகள், பிளக்குகள் ஆகியவை இந்தப் பட்டியலில் உள்ள சில. இதைத் தெரிந்து கொள்வது முன்னெச்சரிக்கையாக இருக்க உதவுமல்லவா?

— இந்திய தரக்கட்டுப்பாடு கேந்திரம்.

# ஜன்னல்



ஸ்பெஷல் பீடாவின் தேங்காய்த் துகள் பல்லிடுக்கில் மாட்டிக் கொண்ட பிறகுதான், அவன் மாட்டிக் கொண்ட விஷயம் ஞாபகத்துக்கு வந்தது.

திடுக்கிட்டு மணியைப் பார்த்தான், கோதண்டராமன்.

6.10

''அச்சச்சோ...''

''ஏன்... என்ன ஆச்சுது?'' என்றான், பட்டாபி.

''ஆறு மணிக்கெல்லாம் நான் வீட்டுக்குப் போகணும். இல்லேன்னா என் மனைவி கோபிச்சுக்குவாள்.''

''கோபிப்பாளா...? ஹா...!'' ஏளனமாய்ச் சிரித்தான், அவன். ''சரியான தொடை நடுங்கியப்பா, நீ. இரண்டாயிரம் ரூபாய் சம்பளம் வாங்குகிறாய். ஆண்பிள்ளையா லட்சணமா இருக்க வேண்டாம்?''

''என்ன பண்ணணும்?'' புருவம் சுருங்கினான், கோதண்டராமன்.

''சுதந்திரமாய்ச் சுற்றணும். நினைச்ச நேரத்துக்கு வீட்டுக்குப் போகணும்.''

''நீ அப்படித்தான் போறியா?''

''நான் என்ன...? ஆண்பிள்ளை வர்க்கமே அப்படித்தான் போகிறது.''

''பின்னே ஏன்... என் மனைவி மட்டும் தோட்டுக்குள்ளே நத்தையை அடைக்கிற மாதிரி ஆறு மணிக்கெல்லாம் வீட்டுக்கு வந்துடு'ன்னு சட்டம் போடுறாள்?''

''உன் கையாலாகாத்தனம்தான். நீ உலகமகா தண்டம் என்கிறதை அவள் நன்றாய்ப் புரிஞ்சுண்டிருக்கிறாள்.''

''இப்ப நான் என்ன பண்ணணும் என்கிறாய்?'' உடம்பிலே கொஞ்சம் 'வீரம்' உற்பத்தியானது மாதிரியும் அதே சமயம் சற்றுக் குழப்பத்துடனும் கேட்டான், கோதண்டராமன்.

''தைரியமாய் வீட்டுக்குப் போ. உன் மனைவி, 'ஏன் லேட்' என்று அதிகாரமாய்க் கேட்டால், 'அப்படித்தான் வருவேன்'னு அடித்துச் சொல்லு. அதுக்கு மேலே மீறினால் கன்னத்திலே ரெண்டு கொடு. அப்புறம் எல்லாம் சரியாயிடும். உன் வழிக்கு அவள் வரவே மாட்டாள்.''

அப்போது 26ம் நம்பர் பஸ் வரவே,

''நீ போக வேண்டிய பஸ் வந்து விட்டது'' என்று துரிதப்படுத்தினான், பட்டாபி.

''உன் அட்வைசுக்கு ரொம்ப நன்றி. நான் வர்றேன்'' என்று ஓடிப் போய் பஸ்ஸில் தொற்றினான், கோதண்டராமன்.

**ஆ**யிரக்கணக்கானவர்கள் பணிபுரியும் தொழிற்சாலையில் அடுத்தடுத்து நாற்காலியைத் தேய்த்துக் கொண்டிருப்பவர்கள் கோதண்டமும், பட்டாபியும்.

காலையில் சிற்றுண்டியைக் கட்டிக் கொண்டு ஏழு மணிக்கு ஸ்ரீரங்கத்தை விட்டுப் புறப்பட்டால், வீடு திரும்ப ஐந்தே முக்கால்... ஆறு மணியாகி விடும்.

ஆறு—ஐந்து வரை 'கிரேஸ்' டைம் கொடுப்பாள், மைதிலி — கோதண்டராமனின் மனைவி.

அதற்குள் வந்தாக வேண்டும்.

தவறினால் தகராறுதான்.

மொலு மொலுவென்று பிடித்துக் கொள்வாள், மனுஷி.

அதற்குப் பயந்து, ஆறு மணிக்கெல்லாம் தவறாமல் ஆஜராகி விடுவான், கோதண்டராமன்.

இன்று, கூட்டம்... கூட்டாளிகளின் சேர்க்கை என்று காலதாமதமாகி விட்டது.

ஆனாலும் என்ன. பட்டாபிதான் ஐடியா சொல்லிக் கொடுத்திருக்கிறானே.



# ஓ.... தீக்குச்சியே!

- ஓ.... தீக்குச்சியே!
- நெருப்பின் சுருக்கமே!
- நீ
  ஒரு திருவிளக்கை
  ஏற்றிவைக்க
  அல்லவா
  தீக்குளிக்கிறாய்!
- உன்
  தியாக வேள்வியில்
  இருளின் ஆதிக்கம்
  அல்லவா
  எரிந்து கொண்டு இருக்கிறது!
- உன்
  கண்சிவந்தால்
  இம் மண் சிவக்கும்!
- உன் ஆற்றல்
  அணுவாற்றல்!
- நீ நினைத்தால்
  நீராரும் கடலுடுத்த
  இந்நிலவுலகையே
  நிர்மூலம் ஆக்குவாய்!
- அதுசரி...
  ஏழையின் வீட்டு
  அடுப்பில்
  நீ
  எப்போது சிரிப்பாய்
- எங்கள்
  பசியோடு விளையாடும்
  பாவிகளைத்
  தேடி
  எப்போது எரிப்பாய்?

— பல்லவன்.

ஏழுரை மணி.

சுவர்க் கோழி கத்திக் கொண்டிருக்கையில் குரலைக் கனைத்துக் கொண்டே உள்ளே நுழைந்தான் கோதண்டராமன்.

இடை கழியில் செருப்பை விட்டு விட்டு, மேசை மீது டிஃப்பன் பாக்சை வீசினான்.

'சமையல் கட்டுக்குள் எட்டிப் பார்த்தான்.

குக்கர் சப்தம் கூவியது. மைதிலியைக் காணோம்.

''மைதிலீ... மைதிலீ...'' என்று இரட்டை மாத்திரையில் கூப்பாடு போட்டான்.

''அடேங்கப்பா... மைதிலியாம் மைதிலி! போகட்டும். பெயரையாவது ஞாபகம் வச்சிருக்கேளே'' என்று கழுத்தைச் சிலுப்பிக் கொண்டே புறக்கடையிலிருந்து வந்தாள், மைதிலி.

முகத்தில் 'டென்ஷனை' ஏற்றிக் கொண்டு, ''வேறு எதையெல்லாம் ஞாபகம் வச்சுக்கணும்?'' என்றான் கோதண்டராமன்.

''மணியைப் பார்த்தீங்களா? ஏழுரை! ஐந்து மணிக்கு ஆபீசை முடிச்கட்டு இரண்டரை மணி நேரமா எங்கே சுத்திட்டு வர்றீங்க?''

''நான் ஒண்ணும் வெறுமனே ஊர் சுத்திட்டு வரல்லை. யூனியன் மீட்டிங் நடந்தது...''

''அதான் அரை மணியிலே முடிந்திருக்குமே.''

''அப்புறம் நண்பர்களுடன் சேர்ந்து ஓட்டலுக்குப் போனேன்.''

''கால் மணி நேரம் சாப்பிட்டிருப்பீங்க. அதுக்கு மேலே...''

''ஷட் அப்.'' வெப்பமானான், கோதண்டராமன். பட்டாபி அடித்த 'பம்ப்' வேலை செய்ய ஆரம்பித்தது.

''நீ இப்படிக் குறுக்குக் கேள்வி கேட்டியோ, எனக்குக் கெட்ட கோபம் வரும்'' என்று சீறினான்.

''கோபமா...? ஹூம்.. உங்கள் கோபம் வந்து என்னை என்ன பண்ணும்!''

கணவன் மனத்தின் கலப்படத்தைப் புரிந்து கொள்ளாத மைதிலி வழக்கமான சிரிப்புடன் இயல்பாய்ப் பேசினாள். ஆனால் —

''இப்படி ஓங்கி அறைவேன்'' என்று கோதண்டராமன் அவள் கன்னத்தில் சாத்தியதும் —

உடம்பெங்கும் வெடவெடக்க மைதிலியின் கண்களில் நீர் திரண்டது.

எதிர்பாராத அம் முரட்டுத் தாக்குதலால், அவளது மென் உதடு ரோஜாத் தளிர் போல் துடித்தது.

''ஏங்க... நீங்களா... நீங்களா என்னை அறைஞ்சுட்டீங்க? எங்கே.. எப்போது இதெல்லாம் கத்துட்டீங்க...'' கன்னத்தைத் தடவிக் கொண்டே, பரிதாபமாய்த் தேம்பினாள், அவள்.

''பின்னே என்னடி. ஆண் பிள்ளை வெளியில் போனால் அவனுக்கு ஆயிரம் ஜோலிகள் இருக்கும். அது புரியாமல்

## வைஸ்யா பாங்க் தமது

# ஃபர்ஸ்ட் ஹோம் ஸ்கீமை ஆரம்பிக்கிறது.

நேஷனல் ஹவுஸிங் பாங்கின் HLA ஹோம் லோன் அக்கவுண்ட்.



உங்களது சொந்த வீடு கனவு நனவாக கடனுதவியுடன் கூடிய சேமிப்பு திட்டம். வசதிக்கேற்ப கவர்ச்சிகரமான வட்டியுடன் சேமிப்பு. வீடு கட்டுவதற்கோ அல்லது ஃபிளாட் வாங்குவதற்கோ குறைவான வட்டியில் உறுதியான கடன் வசதி. நிறைவான வரிச் சலுகைகள்.

சேமிப்பின் காலம் முடியும் முன்னரே வீடு அமைத்துக் கொள்ள வைஸ்யா பாங்கின் ப்ரத்தியேக உதவி.

**இந்த சேமிப்பு திட்டம் ஜூலை 1, 1989 முதல் துவங்குகிறது. ஜூலை மாதத்தில் இந்த சேமிப்பு கணக்கை துவக்கி ஓர் கவர்ச்சிகரமான பரிசு பெறுங்கள்.**

மேல் விவரங்களுக்கு உங்களுக்கருகாமையில் உள்ள வைஸ்யா பாங்கின் கிளைகளுக்கு தொடர்பு கொள்க.

வாருங்கள், கூட்டு சேர்ந்து நன்கு வளருவோம்.

**தி வைஸ்யா பாங்க் லி.**

பதிவு அலுவலகம்: 489, அவன்யூ ரோடு, பெங்களூர்-560 002.
நிர்வாக அலுவலகம்: 72, செயின்ட் மார்க்ஸ் ரோடு, பெங்களூர்-560 001.
சேர்மேன்: ரமேஷ் கெல்லி.

Credit/Canvas

நிமிஷ வாரியாய்க் கணக்கு கேட்கறியே... என்ன நியாயம்! அப்படி என்ன என் மீது உனக்கு அத்தனை சந்தேகம்?''

ஆவேசமான அவன் கேள்வியைக் கேட்டதும், மைதிலியின் முகம் மாறியது. அழுகையினூடே சிறிது சிரிக்க முயன்றாள்.

''கணவனை ஏன் தாமதம் என்று மனைவி கேட்டால் அது சந்தேகம் இல்லைங்க. மனசிலே உண்டான சங்கடம்'' என்று சோகமாய்ச் சொன்னாள், அவள்.

கோபம் தணிந்து நிதானமானவன் போல், மனைவியை அடித்து விட்டோமே என்று அனுதாபம் கசியப் பெற்றவனாக அமைதியாய் அவளைப் பார்த்தான், கோதண்டராமன்.

''சங்கடமா?''

''சங்கடம் மட்டும் இல்லைங்க. சஞ்சலம், ஏமாற்றம், ஆற்றாமை எல்லாம் கலந்த ஒரு மௌன வேதனை.''

''நீ என்ன சொல்கிறாய்?''

கணப்பொழுது அவனைக் கூர்ந்து பார்த்து விட்டுச் சொன்னாள் மைதிலி: ''நீங்கள் காலையிலே வீட்டை விட்டுக் கிளம்பிட்டா, வீடு திரும்புகிறவரைக்கும் உங்கள் உலகம் வெளியிலே இருக்கிறது. ஆனந்தம், ஆச்சரியம், அதிர்ச்சி, ரசாபாசம் இப்படி எத்தனையோ விஷயங்களை அனுபவிக்கிறீங்க. ஆனால், பெண்? அவள் எங்கே போவாள்.. யாரைப் பார்ப்பாள்...? நீங்கள் அனுபவித்த அந்த உலகத்தை அவளும் பார்க்க வேண்டாமா?''

கோதண்டராமனின் உதடுகள் தயங்கித் தயங்கி, ''நிச்...சய....மா பார்க்கணும்'' என்றன.

''அதுக்காகத்தான் வெளியில் போன கணவன், சரியான நேரத்துக்கு வீடு திரும்பணும்னு மனைவி எதிர்பார்க்கிறாள். ஏன் தெரியுமா? நீங்கள்தான் அவளுக்கு ஜன்னல். உங்கள் மூலமாகத்தான் அவள் இந்த உலகத்தைப் பார்க்கிறாள். அந்தத் தருணம் தள்ளிப் போகப் போக அவளுக்கு ஏமாற்றம் அதிகமாகிறது. அந்த ஆற்றாமையிலும், தவிப்பிலும்தான் 'ஏன் லேட்' என்று கேட்கிறாளே தவிர, உங்களிடம் தப்பு நினைத்தோ, குற்றம் கருதியோ அப்படி கேட்கல்லை.''

அழுகை கலந்த சிரிப்புடன் அவள் பொழிந்த வார்த்தைகள், கோதண்டராமனின் மயிர்க்கால்களைச் சிலிர்க்க வைத்தன.

''வாஸ்தவம்தான், மைதிலி. அவசரப்பட்டு உன்னை... என்னை... நான்... ஸாரிம்மா...'' தழுதழுத்தான், அவன்.

''பரவாயில்லைங்க. இனிமேல் நீங்கள் லேட்டாய் வர மாட்டீங்க இல்லையா?'' விழிகளின் ஈரம் உலர்ந்து, முழுமையாகச் சிரித்தாள், மைதிலி.



# பொன்னியின் செல்வன்

## அத்தியாயம் 13
## குந்தவை கேட்ட வரம்

ஜோதிடரின் வீட்டுக்குள் பழுவேட்டரையர் பிரவேசித்தபோது அங்கு உண்மையாகவே குந்தவைப் பிராட்டியும் வானதியும் இருந்தார்கள்.

ஈழத்து ராணியைப் பொழுது விடிந்ததும் காணாததிலிருந்து குந்தவையின் மனம் அமைதியை இழந்து விட்டது. அதே சமயத்தில் பூங்குழலியும் காணாமற் போனது அவளுடைய கலக்கத்தை அதிகமாக்கிற்று. முதன் மந்திரி அநிருத்தரைப் பார்க்கச் சென்றாள். அச்சமயத்தில் அங்கே அருள்மொழிச் சோழனைப் பற்றிச் செய்தி வந்திருந்தது. நாகைப்பட்டினத்தில் அடித்த புயலின் காரணமாக அவன் வெளிப்பட நேர்ந்ததென்றும், திரளான மக்கள் கூடி அவனை வெற்றி முழக்கத்துடன் தஞ்சைக்கு அழைத்து வருகிறார்கள் என்றும் அறிந்தாள். குந்தவையின் பரபரப்பு எல்லையைக் கடந்து விட்டது. இதனால் ஏதோ விபரீதம் வரப்போகிறது என்று கருதினாள். பொன்னியின் செல்வனை வழியில் சந்தித்துப் பேசித் தஞ்சையில் நடந்ததையெல்லாம் தெரிவிக்க வேண்டும் என்று விரும்பினாள். அவன் பெரும் ஜனக் கூட்டம் புடை சூழத் தஞ்சைக் கோட்டையில் பிரவேசிக்க விரும்பினால், பழுவேட்டரையரின் படை வீரர்கள் அவனைத் தடுத்து நிறுத்த முயலுவார்கள். இதற்கிடையில் பூதி விக்கிரம கேசரி தென் பிரதேசத்துப் படைகளுடனே கொடும்பாளூர் வரைக்கும் வந்து விட்டார் என்று தெரிய வந்திருந்தது. இரண்டு படைகளும் தஞ்சைக் கருகில் மோதிக் கொள்ளும்படி நேரிடலாம். அதனால் தந்தையின் உள்ளம் புண்படும் என்பது நிச்சயம். அதனால் அவருடைய உயிருக்கே அபாயம் நேர்ந்து விடலாம். மேலும் என்னென்ன விளையுமோ, யாருக்குத் தெரியும்? புயற் காற்றின் காரணமாகக் குடிமக்களின் உள்ளங்கள் கொந்தளித்துக் கொண்டிருக்கின்றன. ஏதாவது ஒரு வியாஜம் ஏற்பட வேண்டியதுதான். சோழ நாடே அழியும்படியான பெரும் உள் நாட்டுக் கலகம் மூண்டுவிடக் கூடும். பிறகு அதை நிறுத்துவது எப்படி? வந்த பின்னர் நிறுத்த முயலுவதைக் காட்டிலும் முன்னாலேயே தடுக்கப் பார்ப்பது அவசியம் அல்லவா? இல்லாவிடில் இத்தனை காலமும் செய்த முயற்சியெல்லாம் வீணாகிவிடுமே? ஆதலின் அருள்மொழிச் சோழனை வழியிலேயே சந்தித்துப் பழையாறையில் சிறிது காலத்துக்கு நிறுத்திக் கொள்ள வேண்டும். கடம்பூரிலிருந்து பெரிய பழுவேட்டரையரையும் தருவிக்க வேண்டும். அருள்மொழிக்கு இராஜ்யம் ஆளும் ஆசை இல்லை என்பதை அவருக்குத் தெரிவித்து, அவருடைய சம்மதம் பெற்ற பிறகுதான், தஞ்சைக்கு அவனை அழைத்துப் போக வேண்டும்.....

இவ்விதம் தனக்குள் சிந்தித்து முடிவு செய்து கொண்டு, தந்தையிடம் கூடச் சொல்லிக் கொள்ளாமல் அன்னையிடமும் அநிருத்தரிடமும் மட்டும் சொல்லி விட்டு இணைபிரியாத வானதியையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டாள். பழையாறைக்குப்

அமரர் **கல்கி**

போகுமுன்பு குடந்தை ஜோதிடரை இன்னொரு தடவை பார்த்து விட விரும்பினாள். கவலை அதிகம் ஏற்படும்போது வருங்காலத்தைப் பற்றி ஜோதிடம் பார்த்து அறிய விரும்புவது மனித இயல்பு அல்லவா?

வழக்கம் போல் அம்மன் கோவிலுக்கு அருகில் ரதத்தை விட்டு விட்டு ஜோதிடர் வீட்டுக்குள் புகுந்தாள். ஜோதிடரிடம் அவளுடைய கவலையைத் தெரிவிக்கத் தொடங்கிச் சிறிது நேரம் கூட ஆகவில்லை. அதற்குள் வீட்டு வாசலில் ஏதோ தடபுடல் நடைபெறும் சத்தம் கேட்டது. முக்கியமாக, பழுவேட்டரையரின் ஹுங்காரம் அவளுக்கு ரோமாஞ்சனம் உண்டு பண்ணியது. அந்த மாதிரி கம்பீரமாக ஹுங்காரம் செய்யக் கூடியவர் பெரிய பழுவேட்டரையர் ஒருவர் தான். தடுக்க முயன்ற ஜோதிடரின் சீடனைத் தள்ளி விட்டுப் பழுவேட்டரையர் உள்ளே வருவதாகக் காணப்பட்டது. அவர் எப்படி இங்கே வந்தார்? எதற்காக வருகிறார்?' அதுவும் இந்த வேளையில்?....

ஆகா! ஒரு வேளை ஜோதிடம் கேட்கத் தான் வருகிறார் போலும்! அவர் ஜோதிடருடன் பேசுவதைக் கேட்டால் ஒருவேளை அவருடைய மனத்தில் உள்ள எண்ணங்கள் தெரியக்கூடும். இராஜ்யத்துக்கும் இராஜ குலத்துக்கும் பெரிய நெருக்கடி நேர்ந்திருக்கும் இச்சமயத்தில் பெரிய பழுவேட்டரையரின் மனப்போக்குத் தெரிந்தால் எவ்வளவோ சௌகரியமாயிருக்கும். அதைத் தெரிந்து கொள்ள இப்போது ஒரு சந்தர்ப்பம் நேர்ந்திருக்கிறது. மேலும், தானும் வானதியும் அங்கு இருப்பதைப் பார்த்தால், அவர் என்ன எண்ணிக் கொள்வாரோ என்னமோ?... ஏன்? தவறாகத்தான் எண்ணிக் கொள்வார்! சந்தேகமில்லை. ஆகையால் அவர் கண்ணில் படாமல் மறைந்திருப்பது தான் நல்லது......

குந்தவை, ஜோதிடரிடம் ஜாடையினால் தனது நோக்கத்தைத் தெரிவித்துவிட்டு வானதியையும் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு அவசரமாக அடுத்த அறைக்குள்ளே சென்றாள்.

அவர்கள் புகுந்த அறையின் கதவு சாத்தப்பட்ட தட்சணமே பழுவேட்டரையர் உள்ளே பிரவேசித்தார். பரபரப்புடன் எழுந்து நின்று கும்பிட்ட ஜோதிடரை உற்றுப் பார்த்துவிட்டுச் சுற்றுமுற்றும் நோக்கினார். அவர் முகத்தில் வியப்புக்கும் ஏமாற்றத்துக்கும் அறிகுறி தென்பட்டது. இது ஒரு கண நேரந்தான். உடனே சமாளித்துக் கொண்டு, "ஜோதிடரே! நான் யார் தெரிகிறதா? தனாதிகாரி பெரிய பழுவேட்டரையனேதான்! ஏன் இவ்வாறு பேந்தப் பேந்த விழிக்கிறீர்? அவ்வளவு உருமாறிப் போயிருக்கிறேனா? உம்மால் எனக்கு ஒரு முக்கியமான காரியம் ஆகவேண்டியிருக்கிறது. ஒரு பெரிய உதவி நீர் எனக்குச் செய்ய வேண்டும். முதலில், சாப்பிடுவதற்கு ஏதேனும் இருந்தால் கொண்டு வாரும். ரொம்பப் பசியாயிருக்கிறது. சாப்பிட்டுக் கொண்டே சொல்ல வேண்டியதைச் சொல்கிறேன்'' என்றார்.

ஜோதிடர் தட்டுத் தடுமாறி, "ஐயா! இந்த ஏழை எளியவனால் தங்களுக்கு என்ன பெரிய உதவி தேவையாயிருக்க முடியும்? இந்தக் குடிசையைத் தேடித் தாங்கள் வந்தது என் முன்னோர் செய்த பாக்கியம். தங்களுடைய அந்தஸ்துக்குத் தக்கபடி விருந்து அளிக்க என்னால் இயலாது. ஆனாலும் இந்தக் குடிசையில் உள்ளவையெல்லாம் தங்களுடையவை தான். தயவு செய்து அமருங்கள். நின்று கொண்டிருக்கிறீர்களே? தங்களைப் பார்த்தவுடனே திடுக்கிட்டுப் போனேன். அதனால் தங்களைத் தக்கபடி வரவேற்று உபசரிப்பதற்குத் தவறி விட்டேன். ஆகா! இந்த எளியவனுடைய குடிசையில் தாங்கள் அமருவதற்குத் தகுதியான ஆசனம் கூட இல்லை. பெரிய மனசு செய்து அந்தப் பலகையிலே உட்கார வேண்டும்'' என்று, சற்று முன் குந்தவையும் வானதியும் உட்கார்ந்திருந்த பலகைகளைச் சுட்டிக் காட்டினார்.

பழுவேட்டரையர் அப்பலகைகளையும் அவற்றின் அருகில் சிந்தியிருந்த மலர்களையும் உற்றுப் பார்த்து விட்டு, "ஜோதிடரே! இல்லை; எனக்கு உட்கார நேரமில்லை. ஏதாவது சாப்பிடுவதற்குக் கொடுக்கக் கூடியது இருந்தால் இலையிலே சுற்றிக் கையிலே கொடுத்து விடுவீர். தஞ்சைக்கு அவசரமாக ஒரு செய்தி அனுப்ப வேண்டும். என் சகோதரன் காலாந்தக கண்டனுக்கு... ஓலையும் எழுத்தாணியும் தருகிறீரா?... வேண்டாம்! ஓலை எழுதிக் கொண்டிருக்க நேரமில்லை. என் முத்திரை மோதிரத்தைக் கொடுக்கிறேன். அதை எடுத்துக் கொண்டு நீர் தஞ்சாவூர் உடனே போக முடியுமா? அல்லது வாசலில் நின்றானே உமது சீடன், நல்ல தடியனாக இருக்கிறான். அவனை அவசரமாக அனுப்ப முடியுமா?" என்று கேட்டார்.

"தங்கள் கட்டளை எதுவோ, அப்படியே செய்கிறேன். நானும் என் சீடனும், இரண்டு பேரும் வேணுமானாலும் போகிறோம். ஆனால், தனாதிபதி! பெரிய மனசு செய்து சிறிது நேரம் இந்த ஏழையின் குடிசையில் அமர்ந்து, இந்த எளியவன் அளிக்கும் அமுதைத் தாங்கள் அருந்தி விட்டுப் போக வேண்டும்!''

"ஜோதிடரே! எதற்காக உம்மை ஏழை என்றும் எளியவன் என்றும் அடிக்கடி சொல்லிக் கொள்கிறீர்? உம்முடைய வீட்டைத் தேடி அரசர்களும் அரசிளங் குமரிகளும் அடிக்கடி வருவதுண்டு என்று கேள்

விப் பட்டிருக்கிறேன். நான் ஒருவனே உம்மிடம் ஜோதிடம் கேட்க வராதவன். அது தவறு என்பதை உணர்ந்து கொண்டேன். ஒரு வேளை உம்மிடம் கேட்டிருந்தால், இம் மாதிரி பயங்கர விபத்துக்கள் ஏற்படாமலிருந்திருக்கலாம்......''

''ஐயா! தங்கள் மொழிகள் எனக்குப் பெரிதும் கவலையைத் தருகின்றன. என்ன விபத்து நேர்ந்தது? யாருக்கு? தங்களை இந்தக் கோலத்தில் பார்த்ததும் நான் திடுக்கிட்டது சரிதான். புயலிலும் வெள்ளத்திலும் சிக்கிக் கொண்டீர்களா? கொள்ளிடம் உடைப்பு எடுத்துக் கொண்டது என்று கேள்விப் பட்டேன். ஒருவேளை, அதனால்.....? தனாதிபதி! பழுவூர் இளைய ராணி சௌக்கியமாயிருக்கிறார்கள் அல்லவா?'' என்று ஜோதிடர் கேட்டதும், பழுவேட்டரையர் பயங்கரத் தொனியில் சிரித்தார்.

''இல்லை, இல்லை! பழுவூர் இளைய ராணிக்கு ஒன்றும் நேரவில்லை. அவள் கொள்ளிடத்தில் முழுகிச் செத்துப் போய் விட வில்லை. இதுவரையில் கடம்பூர் அரண்மனையில் சௌக்கியமாகவே இருக்க வேண்டும். ஆனால் அந்தச் சண்டாளி நாளை இந்த நேரம் வரையில் உயிரோடு இருப்பாளா என்று நான் சொல்ல முடியாது. ஜோதிடரே! நீர் சொல்ல முடியுமா? இராஜ குடும்பங்களைச் சேர்ந்தவர்கள் எல்லாருடைய ஜாதகங்களும் உம்மிடம் இருப்பதாகக் கேள்விப் பட்டிருக்கிறேன். அது உண்மையா? நந்தினியின் ஜாதகம் நான் கிழ வயதில் அறிவு கெட்டு மணந்து கொண்ட மோகினிப் பேயின் ஜாதகம் இருக்கிறதா?''

ஜோதிடர் மேலும் பதறிப் போனவராய், ''தனாதிபதி! இது என்ன சொல்கிறீர்கள்? என்னைச் சோதனை செய்கிறீர்களா? இளைய ராணியின் ஜாதகம் என்னிடம் இல்லை. அவர் பிறந்த நாளும் வேளையும் தாங்கள் தெரிவித்தால் ஜாதகம் கணிக்க முடியும்'' என்றார்.

''வேண்டாம்; வேண்டாம். நந்தினியின் ஜாதகத்தை நானே கணித்துக் கொள்வேன். அவளுடைய ஆயுளை நானே, என் கையினாலேயே, முடிவு கட்டத் தீர்மானித்து விட்டேன். மற்றவர்களுடைய ஜாதகத்தைப் பற்றித் தெரிந்தால் சொல்லுங்கள். சக்கரவர்த்தியின் ஆயுர்ப் பாவம் எப்படியிருக்கிறது? அவருடைய குமாரர்கள் இருவருடைய ஆயுர்ப்பாவமும் எப்படியிருக்கிறது?..... ஆகா! தலையை அசைக்கிறீர்! நீர் சொல்ல மாட்டீர். உம்மை நான் சோதிப்பதாகவே எண்ணுவீர். அல்லது உம்முடைய ஜோதிட சாஸ்திரம் எல்லாமே வெறும் புரட்டோ, என்னமோ, யார் கண்டது?..... ஜோதிடரே! ஜாதகம் ஒரு புறம் இருக்கட்டும். சில காலமாக வானத்தில் தோன்றிக் கொண்டிருந்த தூமகேது இன்று காலையில் வானத்திலிருந்து பூமியில் விழுந்து மறைந்ததே. அது உமக்குத் தெரியுமா? தெரிந்தால், அதன் பொருள் என்ன என்று சொல்லக்கூடுமா? அது ஏதேனும் பெரிய உற்பாதத்தைக் குறிப்பிடுகிறதா? சக்கரவர்த்திக்கோ அவருடைய மக்களுக்கோ நேரப் போகிற விபத்தைக் குறிப்பிடுகிறதா? இதைக் கூட நீர் சொல்ல மறுப்பதாயிருந்தால் உம்முடைய ஜோதிடம் வெறும் புரட்டுத்தான்!.....''

''தனாதிபதி! அப்படி முடிவு கட்ட வேண்டாம். இராஜாங்க சம்பந்தமான காரியங்களில் ஜோதிடம் பார்க்கக் கூடாது என்பது எங்கள் தொழிலின் பரம்பரை மரபு. இன்று காலையில் தூமகேது விழுந்ததை நான் கண்ணால் பார்க்கவில்லை. ஏதோ ஜகஜ்ஜோதியான வெளிச்சம் தோன்றியதைக் கண்டு ஆச்சரியப் பட்டு உடனே எழுந்து வெளியில் சென்று பார்த்தேன். சில நாளாக வால் குறுகி வந்து கொண்டிருந்த தூமகேதுவைக் காணவில்லை. தூமகேது தோன்றுவதும் விழுவதும் அரசு குலத்தினர்க்கு அரிஷ்டத்தைக் குறிப்பிடுவதாகச் சொல்லுவார்கள். ஆனால் அது ஜோதிட சாஸ்திரத்தைச் சேர்ந்ததல்ல. ஜனங்களின் தொன்று தொட்ட நம்பிக்கை, அதில் எனக்கு அவ்வளவாக நம்பிக்கை கிடையாது. இன்று காலையிலே கூடச் சக்கரவர்த்தி சௌக்கியம் என்று தெரிந்து கொண்டிருக்கிறேன்....''

''அது நமது அதிர்ஷ்டந்தான். இன்றிரவு சக்கரவர்த்திக்கு ஒன்றும் நேரிடாமலிருக்க வேண்டும். நாளை வரையிலேஅவர் சுகமாயிருந்தால், அப்புறம் கவலையில்லை. பொன்னியின் செல்வனைப் பற்றி ஏதேனும் தெரியுமா?.....''

''நேற்றிரவு வெகு நேரத்துக்குப் பிறகு இளவரசர் திருவாரூர் வந்து சேர்ந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். தனாதிபதி! பதினாயிரம், லட்சம் மக்கள் அவரைச் சூழ்ந்து வந்து கொண்டிருக்கிறார்களாம், அவருடைய விருப்பத்துக்கு விரோதமாக அவரைத் தஞ்சைக்கு அழைத்து வருகிறார்களாம்....''

''ஆகா! அவர்கள் மட்டும் இளவரசரைத் தஞ்சையில் கொண்டு போய்ச் சேர்த்து விட்டால் எவ்வளவோ நன்றாயிருக்கும். ஆனால் முடியுமா? லட்சக் கணக்கானவர்கள் சூழ்ந்திருந்தாலும் யமனைத் தடுத்து நிறுத்த முடியுமா? சொல்லும், ஜோதிடரே, சொல்லும்! நீர் ஜோதிடம் சொல்லா விட்டாலும் நான் சொல்லுகிறேன். சக்கரவர்த்திக்கும் அவருடைய குமாரர்கள் இருவருக்கும் இன்றைக்குப் பெரிய கண்டம் காத்திருக்கிறது. யமதர்மன் அவர்களை நெருங்கி நெருங்கி வந்து கொண்டிருக்கிறான். சக்கரவர்த்தியின் யமன் பழுவூர் மாளிகையைச் சேர்ந்த பொக்கிஷ நிலவறையில் மறைந்திருக்கிறான். அருள் மொழியின் யமன் யானைப் பாகனுடைய அங்குசத்திலே ஒளிந்திருக்

கிறான். அவர்கள் இருவரையும் தடுத்து நிறுத்திச் சக்கரவர்த்தியையும் பொன்னி யின் செல்வனையும் காப்பாற்றுவது உம் முடைய பொறுப்பு. என் முத்திரை மோதி ரத்தை எடுத்துக் கொண்டு உம் சீடன் தஞ் சைக்குப் போகட்டும். நீர் திருவாரூர் சென்று இளவரசருக்கு எச்சரிக்க வேண் டும். செய்வீரா! உடனே புறப்படுவீரா?''

ஜோதிடர் தத்தளித்துப் போனார். பழு வேட்டரையருக்குச் சித்தப் பிரமை பிடித்து விட்டதா என்ற சந்தேகம் அவர் மனத்தில் தோன்றியது. ஆனால் அப்படியும் நிச்சய மாகச் சொல்லுவதற்கில்லை. கூறுவதெல் லாம் அறிவுக்குப் பொருத்தமாகவே இருக் கிறது. ஆத்திரத்துடனும் பரபரப்புடனும் பேசினாலும், உண்மையைச் சொல்லுகிறவ ராகவே தோன்றுகிறது. இந்தப் பேச்சை யெல்லாம் இளைய பிராட்டியும் கேட்டுக் கொண்டிருப்பார். அவளுடைய கருத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும். எப்படியா வது இந்தக் கிழவரை இங்கிருந்து உடனே அனுப்பி விடவேண்டும்.

''துர்க்கா பரமேசுவரியின் அருளினால் தங்களுடைய கட்டளையை என்னால் இயன்றவரை நிறைவேற்றிவைப்பேன்!''

இப்படி ஜோதிடர் கூறிய போது உள்ளேயிருந்து பெண்கள் அணியும் பாதச் சிலம்பின் ஒலி கேட்டது.

''ஆகா! துர்க்கா பர மேசுவரி பாதச் சதங்கையை ஒலித்து அருள் புரிகிறாள். இனி, நான் கடம்பூருக்குத் திரும் பலாம். இதோ புறப்படுகிறேன்...''

''தனாதிபதி! பசியாயிருக்கிறது என்றீர் களே? இந்த எளியவன் வீட்டில் அமுது செய்து விட்டு....''

''வேண்டாம், வேண்டாம்! என் பசி தாகம் எல்லாம் பறந்து போய் விட்டன. நானும் கடம்பூருக்குப் பறந்து போக வேண்



டும். ஆலயத்துக்கு அருகில் ரதம் ஒன்று நிற்கிறதே. அது யாருடையது, ஜோதிடரே! அதை நான் எடுத்துச் செல்லப் போகிறேன். கொள்ளிடக்கரை சென்றதும் திருப்பி அனுப்பி விடுகிறேன், ஓடத்தை மட்டும் எடுத்துக் கொண்டு!.....''

''ஐயா! அந்த ரதம்... அந்த ரதம்.... என் பேரில் கருணை கூர்ந்து அதை எடுத்துப் போக வேண்டாம்.....''

''ஜோதிடரே! நீர் வீணாகக் கவலைப் படாதீர். சோழ நாட்டின் பட்டத்து இளவரசருடைய உயிரைக் காப்பாற்றுவதற்காக நான் அந்த ரதத்தை எடுத்துப் போகிறேன். துர்க்கா தேவியே அதற்குச் சம்மதம் தருவாள். மறுபடியும் பாதச் சிலம்பை ஒலிக்கச் செய்து தேவி அருள் புரிந்தால், சம்மதம் கிடைத்ததாக அறிந்து கொள்கிறேன்... அதோ, கேளும்.''

இவ்விதம் பெரிய பழுவேட்டரையர் கூறிக்கொண்டிருக்கையில், இளையபிராட்டி குந்தவை பக்கத்து அறையின் கதவைத்திறந்து கொண்டு இலேசாகப் பாதச் சிலம்பு ஒலிக்க நடந்து வந்தாள்.

பெரிய பழுவேட்டரையர் அவளைப் பார்த்து வியப்படைய வில்லை; திடுக்குறவும் இல்லை.

''தாயே! நான் ஊகித்தது சரிதான். அடுத்த அறையில் நீ இருக்க வேண்டும் என்று கருதினேன். உன் முகத்தைப் பார்த்துப் பேசுவதற்கு எனக்குத் தைரியம் இல்லை. ஆகையினாலேயே உன் காதில் விழட்டும் என்று இவ்வளவு சத்தம் போட்டுப் பேசி





னேன். ஜோதிடரிடம் நான் சொன்னதையெல்லாம் கேட்டுக் கொண்டாய் அல்லவா?''

''ஐயா! மன்னிக்க வேண்டும். நான் செய்த பிழையை மன்னிக்க வேண்டும். இந்த வீட்டில் தாங்கள் திடீரென்று பிரவேசித்தபோது, தாங்கள் தான் என்பதை என்னால் நிச்சயமாக அறிய முடியவில்லை. அதனால் தங்களுடைய பேச்சை ஒட்டுக் கேட்கும்படி நேர்ந்தது. மன்னிக்க வேண்டும்!'' என்றாள் குந்தவை.

''தாயே! நான் உன்னை மன்னிப்பதற்கு ஒரு காரணமும் ஏற்படவில்லை. உன்னிடந்தான் நான் மன்னிப்புக் கேட்க வேண்டும். மன்னிப்புக் கோரத் தகுதியுடையவனா என்பதே எனக்குச் சந்தேகமாயிருக்கிறது. இன்றிரவுக்குள் கடம்பூர் சென்று, பட்டத்து இளவரசருக்கு எதுவும் நேராமல் தடுத்தேனானால், உன்னிடம் மன்னிப்புக் கோருவதற்கு நான் தகுதி பெறுவேன். மூன்று வருஷங்களாக இந்தக் கிழவனின் கண்கள், மோகாந்த காரத்தினால் மூடியிருந்தன. என் கண்களைத் திறப்பதற்கு நீ எவ்வளவோ பிரயத்தனம் செய்தாய். எத்தனையோ குறிப்புக்கள் சொன்னாய். ஒன்றும் என் காதில் ஏறவில்லை. என் சகோதரன் காலாந்தக கண்டனும் என் கண்களைத் திறக்க முயன்றான். அவன் முயற்சியும் பலிக்க வில்லை. நேற்றிரவு துர்க்கா பரமேசுவரியின் கருணையினால் பாண்டிய நாட்டுச் சதிகாரர்கள் இருவரின் சம்பாஷணையை ஒட்டுக் கேட்க நேர்ந்தது. அதன் பலனாகவே உண்மையை அறிந்தேன். அந்தச் சண்டாளியை, சதிகாரியை, விஷ நாகத்தை, என் அரண்மனையிலேயே வைத்திருந்து பாலூட்டிச் சீராட்டி வளர்த்தேன். அவள் என்னைக் குலத் துரோகியாக்கினாள்; இராஜத் துரோகியாக்கினாள். சோழ நாட்டுப் பொக்கிஷத்திலிருந்து பொருளை எடுத்துப் பாண்டிய நாட்டுச் சதிகாரர்களுக்குக் கொடுத்தாள். அந்தப் பாதகி நந்தினியை இன்று இரவு கழிவதற்குள் என் கையினாலேயே கொன்றாலொழிய என் நெஞ்சில் கொழுந்துவிடும் நெருப்பு அணையாது....''

இவ்வாறு பழுவேட்டரையர் கூறி வந்தபோது அவர் சற்றும் எதிர்பாராத ஒரு காரியத்தைக் குந்தவை செய்தாள். திடீரென்று அவர் காலடியில் விழுந்து வணங்கினாள். பழுவேட்டரையர் இன்னது செய்வதென்று தெரியாமல் திகைத்து நின்றபோது, இளைய பிராட்டி எழுந்து நின்று,, ''ஐயா! எனக்கு ஒரு வரம் கொடுத்து அருள வேண்டும்!'' என்றாள்.

''இளவரசி! என்னைச் சோதிக்கிறாய் போலத் தோன்றுகிறது. வேண்டாம்! என்னுடைய பாவச் செயல்கள் எவ்வளவு பயங்கரமானவை என்பதை நன்கு உணர்ந்து கொண்டேன். அவற்றுக்கு என்ன பிராயச்சித்தம் செய்து கொள்வது என்றுதான் யோசித்துக் கொண்டிருக்கிறேன். அதற்கு முன்னால், இன்றையக் கண்டத்திலிருந்து சோழ குலத்தைச் சேர்ந்த மூன்று பேரையும் தப்புவித்தாக வேண்டும். உன் தந்தைக்கும் சகோதரர்களுக்கும் இன்று தீங்கு ஒன்றும் நேரிடாமலிருக்க வேண்டும். அதற்கு எனக்கு உதவி செய். இன்று ஒருநாள் போகட்டும். நாளைக்கு நானே உன்னிடம் வந்து 'எனக்குத் தண்டனை என்ன?' 'பிராயச் சித்தம் என்ன?' என்று கேட்பேன்!'' என்றார்.

''ஐயா! தங்களுக்குத் தண்டனை கொடுக்கவோ, பிராயச் சித்தம் சொல்லவோ, நான் முற்பட மாட்டேன். தாங்கள் என் பாட்டனாரின் ஸ்தானத்தில் உள்ளவர். என் தந்தையின் போற்றுதலுக்கு உரியவர். உண்மையாகவே, தங்களிடம் ஒரு வரம் கேட்கிறேன்.....''

''அப்படியானால், உடனே கேள் அம்மா! வெறும் பேச்சுப் பேசுவதற்கு இப்பொழுது நேரமில்லை.''

''கொடுப்பதாக வாக்கு அளியுங்கள்!''

''உனக்கும் உன் குடும்பத்துக்கும் நான் செய்து விட்ட துரோகத்துக்கு நான் கொடுக்கக் கூடியது எதுவும் ஈடாகாது. நீ எது கேட்டாலும் கொடுக்கிறேன். சீக்கிரம் கேள்!''

''இளைய ராணி நந்தினி தேவியைத் தாங்கள் ஒன்றும் செய்வதில்லை என்று வாக்கு அளிக்க வேண்டும். அதுதான் நான் கோரும் வரம்!''

''அம்மா! இது என்ன விளையாட்டா? விளையாட இதுதானா சமயம்? என் முதுமைப் பிராயத்தில் நான் புத்தி கெட்டுப் போனது உண்மைதான். அதற்காக என்னை முழுப் பைத்தியக்காரனாக்கி விடப் பார்க்கிறாயா? அந்தச் சதிகாரிக்கு நான் தக்க தண்டனை கொடுக்கா விட்டால், மற்றச் சதிகாரர்களை எப்படித் தண்டிக்க முடியும்? என் கையினால் அவளைக் கொன்று விட்டுத் தான் மறுகாரியம் பார்ப்பேன். என் மனத்திலுள்ளதையெல்லாம் சொல்லி விட்டு இந்தக் கிழவனை அவளால் கடைசி வரையில் ஏமாற்ற முடியவில்லையென்பதை எடுத்துக் காட்டிவிட்டு, அவளை என் வாளினாலேயே வெட்டிக் கொல்லுவேன். அதற்குக் குறைந்த தண்டனை எதுவும் அவளுக்குக்

கொடுத்தால் நியாயம் செய்தவனாக மாட்டேன். அதற்குப் பிறகு, எனக்கு என்ன நியாயமான தண்டனை என்பதையும் யோசிப்பேன். போ! அம்மா! போ! உன் தந்தையையும் தம்பியையும் இன்று வரப் போகும் கண்டத்திலிருந்து காப்பாற்றுவதற்கு வேண்டிய பிரயத்தனம் செய்!....''

''செய்கிறேன், ஐயா! ஆனால் என் சகோதரியைப் பாதுகாக்கவும் முயற்சி செய்ய வேண்டாமா? இளைய ராணி நந்தினி என் சகோதரி. அவருக்குத் தாங்கள் என்ன தீங்கு செய்தாலும், அதுவும் சோழ குலத்துக்குச் செய்த துரோகமாகும்!''

பழுவேட்டரையர் எல்லை கடந்த திகைப்பில் ஆழ்ந்தார். ''நான் இன்னமும் கனவு கண்டு கொண்டிருக்கிறேனா?'' என்று அவர் உதடுகள் முணுமுணுத்தன.

''இல்லை, இல்லை! தாங்கள் கனவு காணவில்லை. தாங்கள் காண்பதும் கேட்பதும் உண்மைதான். சிறிது யோசித்துப் பாருங்கள். பழைய சம்பவங்களை நினைத்துப் பாருங்கள். என் சகோதரன் அருள்மொழி வர்மனைக் காவேரியில் முழுகிப் போகாமல் ஒரு மாதரசி காப்பாற்றியது நினைவிருக்கிறதா? அவள்தான் இளையராணி நந்தினியின் தாயார். இளைய ராணியைத் தாங்கள் மணம் புரிந்து அரண்மனைக்கு அழைத்துக்கொண்டு வந்த நாளில், என் தந்தை நினைவிழந்து விழுந்தது நினைவிருக்கிறதா? இளைய ராணியின் அன்னையைக் காண்பதாக நினைத்தே சக்கரவர்த்தி மூர்ச்சை அடைந்தார். அவள் இறந்து விட்டதாக வெகு காலம் எண்ணிக் கொண்டிருந்தார். ஆகையால் திடீரென்று இளைய ராணியைப் பார்த்ததும் ஞாபகத்தை இழந்தார்....''

பழுவேட்டரையருக்கு வேறு சில சம்பவங்களும் நினைவுக்கு வந்தன. நள்ளிரவில் நந்தினியை அவர் சுந்தர சோழ சக்கரவர்த்தியின் முன்னால் கொண்டு போய் நிறுத்தியதும், அவளைக் கண்டு சக்கரவர்த்தி அலறியதும், அதற்கு நந்தினி கற்பித்துக் கூறிய காரணங்களும் அவருக்கு அப்பொழுது நினைவு வந்தன.

''தாயே! நீ பேசுவது விளையாட்டு அல்ல என்பதை உணர்கிறேன். விதியின் விளையாட்டுத்தான் மிக விசித்திரமாயிருக்கிறது. இளையராணி உன் தமக்கை என்றால், ஆதித்த கரிகாலனுக்கும் அவள் சகோதரியாகிறாள். இந்த உறவு உனக்கு மட்டுந்தான் தெரியுமா? இன்னும் யார் யாருக்கெல்லாம் தெரியும்? சக்கரவர்த்திக்குத் தெரியுமா?''

''சக்கரவர்த்தி இரண்டு நாளைக்கு முன்பு வரையில் என்னுடைய பெரியன்னை இறந்துவிட்டதாகவே எண்ணிக் கொண்டிருந்தார். முந்தா நாள் அந்த மூதாட்டி நேரில் வந்த போது கூட பேய் என்று எண்ணி விளக்கை விட்டு எறிந்தார். பிறகுதான் நம்பினார்....''

''அதைப் பற்றிக் கேட்கவில்லை, அம்மா! இளைய ராணி தன் சகோதரி என்பது கரிகாலனுக்குத் தெரியுமா?''

''அவனுக்கு இதற்குள் தெரிந்திருக்க வேண்டும். எனக்கு அவன் வாணர் குலத்து வீரர் ஒருவரிடம் ஓலை கொடுத்து அனுப்பியிருந்தான். அவரிடம் நான் சொல்லி அனுப்பினேன்.....''

''ஆகா! வந்தியத்தேவன் வல்லவரையனைச் சொல்கிறாயாக்கும்!''

''ஆம், ஐயா!''

''அவன் கரிகாலனிடம் சொல்லியிருப்பான் என்று தோன்றவில்லை. சொல்லியிருந்தாலும் கரிகாலன் நம்பியிருக்க மாட்டான். எனக்கே நம்பிக்கை உண்டாகவில்லையே? அவன் எப்படி நம்புவான்? இளைய ராணிக்கு இச் செய்தி தெரிந்திருக்க முடியாது. தெரிந்திருந்தாலும் பயனில்லை. சதிகாரர்கள் வேறு விதத்தில் தங்கள் நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளப் பார்ப்பார்கள். இன்றிரவு அதற்குக் கட்டாயம் முயற்சி செய்வார்கள். அம்மா! நீ தெரிவித்த செய்தி என்னுடைய பொறுப்பை இன்னும் பயங்கரமாக்குகிறது. இளைய ராணி நந்தினி சகோதர ஹத்தி செய்யாமல் பாதுகாக்கும் கடமை எனக்கு ஏற்படுகிறது. நான் உடனே கடம்பூர் போகிறேன். நீங்கள் வந்த ரதத்தை எடுத்துக் கொண்டு போகிறேன். சக்கரவர்த்திக்கும் பொன்னியின் செல்வனுக்கும் ஒன்றும் நேராமல் பாதுகாப்பது உன்னுடைய பொறுப்பு!'' என்றார்.

''ஐயா! தாங்கள் கவலைப்பட வேண்டாம். நான் இதோ தஞ்சைக்குப் புறப்படுகிறேன். பழையாறையிலிருந்து வாகனம் தருவித்துக் கொண்டு போகிறேன். பொன்னியின் செல்வனைப் பற்றிச் சிறிதும் கவலைப்படத் தேவையில்லை. அவன் பிறந்த நாளும் வேளையும் அவனைப் பாதுகாக்கும்!'' என்றாள்.

''பெண்ணே! ஜோதிடத்தை நம்பி அஜாக்கிரதையாக இருந்து விடாதே! ஜோதிடர்கள் மனத்திற்குள் உண்மை தெரிந்திருந்தாலும் வெளிப்படையாகச் சொல்ல மாட்டார்கள்! இரண்டு பொருள் தொனிக்கும்படி ஏதேனும் கூறி வைப்பார்கள். காரியம் நடந்த பிறகு 'முன்னமே சொல்லவில்லையா?' என்பார்கள். ஜோதிடத்தை நம்பினாலும் ஜோதிடக்காரர்களை நம்ப வேண்டாம்!'' என்று போகிற போக்கில் ஒரு சொல்லம்பைப் போட்டு விட்டுப் பழுவேட்டரையர் வெளியேறினார்.

அவர் அப்பால் சென்று சில வினாடி நேரத்துக்கெல்லாம் ஆழ்வார்க்கடியான் உள்ளே பிரவேசித்தான்.

''ஆம், ஆம்! தனாதிகாரி கூறியதை நான் ஆமோதிக்கிறேன். ஜோதிடத்தை நம்பினாலும் ஜோதிடக் காரர்களை நம்ப வே கூடாது!'' என்றான்.

(தொடரும்)

# செய்தி



**பா**ர்சலை அவிழ்த்து. வந்திருந்த செய்தித்தாள்களை எண்ணப் போன பாஸ்கரன் அதை நிறுத்தினான்.

முதல் பக்கத்திலேயே ஒரு செய்தி. கூடவே இரண்டு புகைப்படங்கள். கண்ணைப் பிடுங்குகிற மாதிரி. பெற்றோர் நிர்ப்பந்தத்தைப் புறக்கணித்து. போலீஸ் ஸ்டேஷனில் திருமணம் புரிந்து கொண்ட ஜோடி என்று செய்தி.

அவன் படங்களைப் பார்த்தான்.

அட, க்ருபா!

பக்கத்தில் சதீஷ்தான்.

செய்தியைப் படிக்கத் தொடங்குமுன் அவனுக்குள் லேசாக ஒரு நடுக்கம். ஒரு குற்றக் குறுகுறுப்பு. படித்த பிறகு அந்த விடி காலையில் அவனுக்கு வியர்த்திருந்தது.

இவ்வளவு தூரத்துக்குப் போகும் என்று அவன் எதிர்பார்க்கவில்லை.

இரண்டு பேர் வீட்டுக்கும் அவன்தான் பேப்பர் போட்டான். இப்போதும் போடப் போகிறான்.

"என்னடா யோசனை? எண்ணலை...?" வேறு பத்திரிகை ஏஜெண்டின் பேப்பர் பையன் சோமு கேட்டான். ஸ்டேஷன் சகா.

இவனிடம் காட்டி விடலாமா?

தூரத்தில் கூட்ஸ் நீளமாக ஊறிக் கொண்டு வந்தது.

வேண்டாம். இவன் போதும் காட்டிக் கொடுக்க.

என்ன மடத்தனம்! இவள் கடிதத்தை அவனுக்கும், அவன் கடிதத்தை இவளுக்கும் விநியோகம் செய்ய எந்த சைத்தான் என்னை விரட்டியது?

ஸ்டேஷனிலிருந்து சைக்கிள் ஏறியதும் வரும் முதல் வீடு க்ருபா வீடுதான்.



ஒவ்வொரு விடியற் காலையிலும் அவள் அந்த வீட்டு மாடியில் ஸ்டேஷனைப் பார்க்கிற விட் அவுட்டில் மறைத் தடுப்பின் கீழே நின்றிருப்பாள்.

அவனைப் பார்த்ததும் ஒரு மாதிரி சிரிப்பாள். பிரியம், உற்சாகம், லேசாய் ஒரு பெருமிதம். சட்டென்று ஒரு குளிர்ப்பதன அறையில் நுழைகிற ஜில்லிப்பு.

இல்லை. எல்லாம் தப்பு. ஒரு மல்லிகை இதழ் விரிந்த மாதிரி. ஒரு மெழுகுவர்த்தியின் குளிர் நீலச் சுடர் போல. என்ன சனியனோ! ஏமாந்தாயிற்று. பயன்படுத்திக் கொண்டாள். கொண்டார்கள். அவளும் அவனும்.

பாஸ்கரன் மீண்டும் புகைப்படத்தைப் பார்த்தான். அதே மாதிரிதான் சிரித்தாள். 'நான் ஒண்ணும் தப்பு பண்ணிடலியே'

அவள் கண்களில் அதே. விருப்பமானதை அடைய எனக்கு முழு உரிமை உண்டு, என்ற பாவம். ஒரு விடுதலையான சுதந்திரக் களிப்பு.

பாஸ்கரன் இப்போதுதான் க்ருபாவின் அப்பாவைப் பற்றி நினைத்தான்.

அவர் மீசை தேவைக்கதிகமாக அவ்வளவு நீளமாக இருந்திருக்க வேண்டாம். கண்களில் அந்த மமதையின் மிடுக்கு. குரலில் அந்த கர்ஜனாகாரம் — இதெல்லாம் இருந்திருக்கத் தேவையில்லை.

முக்கியமாக, பாஸ்கருக்குச் சற்றும் பிடிக்காத ஓர் அல்சேஷனை அவர் வளர்த்திருக்கக் கூடாது.

இதெல்லாம்தான் அவனது எதிர்ப்புணர்வைத் தூண்டியவை. அவனைக் கட்சி மாற வைத்தவை.

"ஏண்டா ஃபங்க் ஆனவனாட்டம் முழிக்கிறே. டயம் ஆவலே?" சோமு பரபரவென்று எண்ணி முடித்துப் பண்டில் காகிதத்தையும் சரடுகளையும் தனியாகச் சுருட்டிக் கொண்டிருந்தான். ஏஜெண்டுக்குக் கணக்கு காட்ட வேண்டும்.

"காப்பீஸ் கொறையற மாதிரி இருக்கு".

"எண்ணாமியே சொல்றியா? எண்ணுடா!"

இனி எண்ணா விட்டால் சோமு துருவி விடுவான்.

"சரியா இருக்கா?"

"சரிதான்."

"நீ ஒரு குபார் — குடாக்டா!"

சோமு மடித்த செய்தித்தாள்களை இரண்டு ரெக்ஸின் பைகளில் திணித்து எழுந்தான்.

"நான் கெளம்பறேன்! இன்னிக்கு ஜோதி நகர்லேருந்து பிகின் பண்றேன். அத்தை வீடு அங்கே இருக்கு இல்லே. காத்தாலே வரச் சொல்லியிருக்காங்க. வர்ட்டா?"

நல்ல வேளை அவன் போய் விட்டான்.

எண்ணிய பேப்பர்களை ரெக்ஸின் பைகளில் திணிக்கும் முன் ஒரு பேப்பரை உருவி மீண்டும் க்ருபாவின் படத்தைப் பார்த்தான்.

இனிமேல் ஸ்டேஷன் பார்த்த மாடியில் அவனுக்கு அந்தச் சிரிப்பு கிடைக்காது. ஒரு நஷ்டம் தெரிந்தது. விலைமதிக்க முடியாத நஷ்டம். சௌந்தர்யம். இளமை, வசீகரம்.

"ஒரு சின்ன உதவி பண்ண முடியுமா?" என்று திராட்சை ரசம் மனசுக்குள் இறங்குகிற மாதிரி ஒரு சிலிர்ப்போ.

என்ன மூட மயக்கமோ!

ஏமாந்தாயிற்று. இதெல்லாம்தான் கட்சி மாற வைத்தது.

சீ, எனக்கென்ன?

பொறாமையோ... தனக்கில்லை என்று தெரிந்தாலும் எவனுக்கோ போன பின், இளிச்சவாய்த்தனமாக அதற்குத் தானும் துணை போன பின் தோன்றும் கையாலாகாத கடுப்போ!

பேப்பர்களையெல்லாம் பையில் அடைத்து டிக்கெட் கவுண்டர் அருகே சாத்தி வைத்திருந்த சைக்கிளில் சாவி போட்டுத் திருப்பி ஒரு க்ளிக் சப்தம் வருகிற வரை மனசு புரட்டிப் புரட்டிப் பார்த்தது.

சைக்கிள் பூட்டு திறந்த ஒலி பளிச்சென்று என்னமோ செய்தது.

'இல்லே. ஒண்ணும் கெட்டது இல்லே. குழப்பிக்க வேண்டாம். நல்லது நடந்திருக்கு. ரெண்டு பேர் 'லவ்'வும் ரொம்ப டீப். அடடா என்னமா எழுதிக்கினாங்க ரெண்டு பேரும். பெரிய கவி கூடப் பிச்சை வாங்கணும்.

அவன் சைக்கிளைத் தள்ளிக் கொண்டு வெளியே வந்தான்.

'இப்படி ரூம்லே பூட்டி வச்சிருந்தா அவ என்ன பண்ணுவா? முதுகிலே வரி வரியா விழும்படி அடிப்பாராமே அவளுடைய அப்பா. இது நல்லது. உத்தமம். ஏதோ என்னாலான கைங்கர்யம்.'

பாஸ்கரன் சைக்கிளில் ஏறி உட்கார்ந்தான்.

'நான்தான் தூதுன்னு வெளியே தெரிஞ்சுடுமோ!'

தெரிஞ்சு என்ன தலை வாங்கறது? அந்த ஆள் அடிச்சுடுவானோ? பார்க்கலாமே.

அடிச்சுடுவானோ என்ற வார்த்தையை பாஸ்கர் மனசுக்குள் அழித்து அடிச்சுடுவாரோ என்று பன்மையாகத் திருத்திக் கொண்டான்.

ரூமில் பூட்டியது.. முதுகில் வரி வரி எல்லாம் அளப்பாக இருந்தால்? ஏன் இருக்கக் கூடாது? இந்தக் காலத்தில் பெண்கள் என்ன வேண்டுமானாலும் அளப்பார்கள்!

மீண்டும் பாஸ்கரனுக்கு க்ருபாவின் அப்பா வைத்திருந்த மீசை. இத்யாதி 'இத்யாதி மீது கோபம் வந்தது. இரண்டு பெடல் மிதித்த பிறகு தன் மீதே வந்தது.

எது எப்படி இருந்தால் என்ன? இது என் வேலையா?

அவன் நஷ்டப்பட்டுப் போன ஒரு

புன்னகை. கிட்டே நெருக்கத்தில் அவனை மேகத்துக்குத் தூக்கிச் செல்வது போன்று அவளிடமிருந்து வந்த வாசனை என்று நினைத்துக் கொண்டான்.

அது பவுடரா? சென்ட்டா?

என்ன இழவோ... ரொம்ப நெகிழ்த்தி விட்டு விட்டது.

சதீஷ் யோகக்காரன்தான். தன்னை விட. அந்த ரோட்டையும் வீட்டையும் சுற்றிச் சுற்றி அலைந்த இளைய தலைமுறையின் பெரிய ஜனத் தொகையை விட.

செய்தித்தாளைப் பிரித்துப் பார்த்த உடனே அந்த மனிதர் முகம் என்னமாய் மாறும்?

இன்றைக்கும் வழக்கப்படி வெளியே தானே பிரம்பு நாற்காலியில் மீசையை முறுக்கிக் கொண்டு உட்கார்ந்திருப்பார்!

தூரத்தில் மாடி தெரிந்தது. மழைத் தடுப் பின் கீழே அந்த லிட் அவுட்.

வெறிச்சோடிய சூன்யம்.

இனிமேல் இங்கே வரும்போதெல்லாம் இப்படித்தான் நிமிர்ந்து பார்க்கப் போகிறேன். எவ்வளவு நாளாகும் எல்லாம் மறக்க?

அவன் சைக்கிளை லேசாய் வளைத்தான்.

இரும்பு கேட் கம்பத்தில் அல்சேஷன். பாஸ்கரன் சைக்கிளுக்கு ஸ்டாண்ட் போட்டான்.

அல்சேஷன் எழுந்து நின்றது. பீடிகையாய் ஓர் உறுமல். அப்புறம் ரயில்வே ஸ்டேஷனுக்கே கேட்கிற மாதிரி, அந்தப் பிரதேசமே கிடுகிடுக்கிற மாதிரி ஒரு குரைப்பு.

இதற்கு என்னமோ விஷயம் தெரிந்திருக்கிறது!

# பறவைகளைப் பாதுகாக்கும்

**ப**றவைகளைப் பாதுகாக்க பிரிட்டன் என்னவெல்லாம் செய்கிறது என்று அறிந்தால் மூக்கின் மீது விரலை வைத்து அதிசயிப்பீர்கள்!

முந்நாளில் என்றால், பறவைகளை ஒரு பொழுதுபோக்காக ஆராய்பவர்களுக்கும் நிஜமான விஞ்ஞானிகளுக்கும் அதிக வித்தியாசம் இராது. இருவருமே பைனாகுலர், பறவைகள் பற்றிய ஒரு புத்தகம், ஒரு நோட்டுப் புத்தகம் இவற்றுடன் காட்டிலும் மேட்டிலும் அலைந்து திரிவார்கள்.

இன்று பறவை விஞ்ஞானிகளுக்கு விண்கோள்கள் கூட உதவுகின்றன! கம்ப்யூட்டர்கள் துணைபுரிகின்றன! இன்னும் என்னென்னவோ நவீன சாதனங்கள்!

'பறவைகள் பாதுகாப்புச் சங்கம்' என்பதாக பிரிட்டனில் உள்ளது. அது நூற்றாண்டு விழா கொண்டாடுவதையொட்டி பிரிட்டிஷ் அரசு, பறவைகளின் படங்களுடன் தபால் தலைகளை வெளியிட்டுள்ளது.




இந்தச் சங்கம் முதன் முதலில் தோற்றுவிக்கப்பட்டது எதற்குத் தெரியுமா? பறவைகளின் சிறகுகளைக் கொண்டு பிரிட்டிஷ் பெண்மணிகள் தங்கள் தொப்பிகளை அலங்கரித்தார்கள். இதற்காக ஏராளமான பறவைகள் கொல்லப்பட்டன. இதைத் தடுப்பதுதான் ஆரம்ப நோக்கம்.

இந்தச் சங்கம் பறவைகளைப் பற்றி மூன்று திரைப்படங்களை எடுத்து மக்களுக்கு அறிவூட்டியுள்ளது.

இன்று விண்கலங்கள் இந்தச் சங்கத்துக்காகப் பிரத்தியேகப் படங்களை எடுத்து அனுப்புகின்றன. பூமியின் மேல் மட்டத்தைப் படம் பிடித்து அனுப்புகின்றன. இந்த வண்ண ஒளிப்படங்கள், கம்ப்யூட்டர் மூலமாக ஆராயப்படுகின்றன. இதிலிருந்து பறவைகள் அதிகமாகத் தங்கி, கூடு கட்டி, இனவிருத்தி செய்யும் இடங்கள் கண்டு பிடிக்கப்படுகின்றன. ஒவ்வொரு திட்டிலும் பறவைகளின் எண்ணிக்கை கணக்கிடப் படுகிறது. அங்கு மக்கள் நடமாட்டத்தைக் குறைக்க நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன.

அதே கம்ப்யூட்டர், பறவைகள், மற்றும் அவற்றின் முட்டைகளை அபகரிக்கும் திருடர்களைப் பற்றிய முழு விவரங்களையும் உள்ளடக்கி வைத்திருக்கிறது! பிரிட்டனில் 25,000 பறவை விரோதிகள் இருப்பதாகத் தெரிய வந்துள்ளது.

பறவைகளின் முட்டைகள் மற்றும் அவற்றின் இறகுகளுக்காக இந்தத் திருடர்கள் சட்ட விரோதமாக இயங்குகிறார்கள். அபூர்வமான பறவைகளைக் கொன்று, தோலுரித்து, பஞ்சடைத்துப் பொம்மை தயாரித்து விற்பவர்களும் உண்டு.

பறவைகளின் வாசஸ்தலங்கள் பற்றிப்

அவன் கதவருகில் நின்றான்.

க்ருபாவின் அப்பா பிரம்பு நாற்காலியிலிருந்து குரல் கொடுத்தார்.

''சீஸர்''

உலகில் பெரும்பான்மை நாய்களுக்கு சீஸர் என்றுதான் பெயர்.

அவர் எழுந்து வந்தார்.

நியூஸ் பேப்பரை அவரிடம் நீட்டு முன் கை நடுங்கிற்று. வழக்கமாக வீசி விட்டுப் போவான். இன்றைக்குத் தோன்றவில்லை:

அவர் பேப்பரை வாங்கும் போது அவருடைய அல்சேஷன் மாதிரியே ஒரு பார்வை பார்த்தார்.

'இதான் சார் நம்பளை வெறுக்க வைத்தது'

போய் விடலாமா?

இல்லை. முக மாறுதல்கள் பாக்கி. படிக்கட்டும். குரூரம், அகம்பாவம் எல்லாம் எப்படி வெடிக்கிறது என்று பார்க்கலாம்.

அவன் நின்று, நன்றாயிருந்த சைக்கிள் செயின் கழன்று விட்டது போல் பாவனை செய்து அதைக் கழற்றி விட்டான். சுற்றிய வாறே சைக்கிள் ஃபிரேம் வழியே அவர் முகம் தெரிகிறதா என்று பார்த்தான்.

தெரிந்தது.

அவர் செய்தித்தாளை விரித்தார்.

நெற்றி சட்டென்று சுருங்கிற்று.

ஒவென்று கத்தப் போகிறார் என்று அவன் எதிர்பார்த்தான்.

ஆனால் அவர் எழுந்து ஓடி வராத குறையாகக் கதவைத் திறந்து கொண்டு வந்தார்.

பாஸ்கர் குனிந்து மும்முரமாகச் சைக்கிள் செயினை மாட்டுவதில் ஈடுபட்டான்.

''தம்பி''

காதில் விழாதது போல் அவன் பெடலைச் சுழற்றினான்.

---

# விண்கோள்கள்!

பாதுகாப்புச் சங்கம் சேகரித்துள்ள தகவல்கள், பறவைத் திருடர்களுக்குக் கிடைத்து விடக் கூடாது என்பதால் மிகுந்த ரகசியமாக வைத்திருக்கிறார்கள். நானூறு பேர் சங்கத் தலைமையகத்தில் பணியாற்றினாலும் அவர்களில் இரண்டு பேருக்கு மட்டுமே கம்ப்யூட்டர்களை அணுக அனுமதி உண்டு!

**ப**றவைகள் வசிக்கும் இடங்களைச் சுற்றித் தானியங்கு காமிராக்கள் உள்ளன. அத்துமீறி யாரும் அப் பகுதியில் நுழைந்தால், உடனே ஓர் அபாய அறிவிப்பு, காவலர் இருப்பிடத்தில் சத்தம் எழுப்பும்; சிவப்பு விளக்கு எரியும்! காவலர்கள் விரைந்து செயல்படுவார்கள்.

சில பறவைகளின் முதுகில் சின்னஞ் சிறிய ரேடியோ ஒலிபரப்புக் கருவிகளைப் பொருத்துகின்றனர். அப் பறவைகள் எங்கு செல்கின்றன, எப்போது ஓய்வெடுக்கின்றன என்பதை, ரேடியோ 'ரிஸிவர்' கருவிகளுடன் அவற்றைப் பின்தொடர்ந்து செல்லும் ஆய்வாளர்கள் கண்டுபிடிக்கின்றனர். இதிலிருந்து அந்தப் பறவையின் பழக்க வழக்கங்கள் பலவற்றை ஆய்வாளர்கள் தெரிந்து கொள்கின்றனர்.

ஏரி குளங்களில் பறவைகள் வந்து அமர வசதியாகச் சிறிய பீடங்கள் மிதக்க விடப்படுகின்றன. இவற்றின் அடியில் எடை பார்க்கும் கருவி உள்ளது. அது ஒவ்வொரு பறவை வந்து அமர்ந்ததும் அதன் எடையைத் தானியங்கு முறையில் குறித்துக் கொள்கிறது. 'ஐரோப்பாவில் உள்ள வேறு சில கழுகுகளை விட பிரிட்டனில் வேல்ஸ் பகுதியில் உள்ள கழுகுகள் குறைந்த அளவில் முட்டை இடுவது ஏன்?' என்பதைக் கண்டுபிடிக்க, விஞ்ஞானிகள் 'ஃபைபர் கிளாஸ்' முட்டை தயாரித்து, அதனை அசல் முட்டைகளுக்கு இடையில் வைக்கிறார்கள். இந்தச் செயற்கை முட்டைக்குள் வெப்பம், ஈரப்பதம் முதலியவற்றைக் கணக்கிடும் கருவிகள் உள்ளன! எவ்வளவு நேரம் தாய்ப் பறவை அடை காக்கிறது என்பதைக் கூட இந்தக் கருவிகள் கணக்கிட்டுப் பதிவு செய்கின்றன!

பறவைப் பாதுகாப்புச் சங்கத்தின் தலைமையகத்தில் உள்ளவர்கள், வேறு பல தேசங்களைச் சேர்ந்த ஆய்வாளர்களுடன் டெலிஃபோன், டெலக்ஸ் தொடர்புகளை வைத்துக் கொண்டு, கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்கின்றனர்.

இத்தாலி, ஃபிரான்ஸ், ஸ்பெய்ன், கிரீஸ் முதலிய நாடுகளில் பறவை வேட்டையாடுவது இன்றைக்கும் ஒரு 'ஃபாஷனான' பொழுதுபோக்காகக் கருதப்படுகிறது. இதனை எதிர்த்துத் தீவிரப் பிரசாரம் செய்கிறது பிரிட்டனின் பறவைப் பாதுகாப்புச் சங்கம்.

— ஸாம்ஹால்.

நன்றி: லண்டன் பிரஸ் ஸர்வீஸ்.



''உன்னைத்தான் தம்பி''

அவன் நிமிர்ந்து பார்த்தான்.

அவர் முகம் கண்டிக் கறுத்தது போலிருந்தது. இப்போது பார்க்க அந்த மீசை மிகவும் பரிதாபம்.

அவன் கீழே விழுந்திருந்த ஒரு காகிதத் துண்டில் கிரீஸைத் துடைத்துக் கொண்டே எழுந்தான்.

''என்ன சார்?''

''எத்தனை பேப்பர் வருது?''

''எண்பது.''

''எத்தனை போட்டே?''

''இதான் மொதல் பேப்பர்''

''இங்கே வா.''

அவன் நெருங்கினான்.

''மொத்தப் பேப்பரையும் நான் வாங்கிக்கறேன்'' அவர் குரல் அடைத்தது.

முடியாது சார்! டெய்லி போடற வீடுகள்லே என்ன பதில் சொல்றது?''

''ஏதாவது சொல்லேன்'' அவருக்குக் கை கால் நடுங்குவது தென்பட்டது.

''ஏஜெண்ட் திட்டுவார் சார்!''

''யாரு... நீலகண்டன்தானே. நான் சொல்லிக்கறேன். பையைக் கொண்டா.''

முடியாது என்று நிஷ்டூரமாக மறுத்து விட்டு அவன் சைக்கிள் ஏறியிருக்கலாம். முடியவில்லை. தயங்கினான்.

''அவரை ஒரு வார்த்தை...''

''நீ வேணும்னா போயி சேஷா கூப்பிட்டார்னு சொல்லிக் கூட்டிட்டு வர்றியா?''

அவன் நெகிழ்ந்து விட்டான். சே! என்ன மாதிரி ஆடி விட்டார் மனுஷன். க்ருபா சொன்னதற்கு நான் அவ்வளவு ஆத்திரப் பட்டிருக்க வேண்டாமோ.

''அந்தப் பையை இப்படிக் கொடு.''

அவன் அனிச்சை செயல் போல் பையைக் கழற்றிக் கொடுக்கவிருந்தவன், சட்டென்று எடுத்து மீண்டும் மாட்டிக் கொண்டான்.

''நான் நிச்சயம் எங்கியும் போடலே சார்! ஏஜெண்டைத்தான் கூட்டிட்டு வருவேன்.''

சைக்கிளை மிதிக்கும் போது ஒரு துக்கம் அவன் வயிற்றில் குமுறியது. தொண்டை வரை வந்து முட்டியது.

'விடிகாலையில் ஒரு புன்னகை... ஒரே ஒரு புன்னகை மட்டும் நஷ்டப்பட்ட எனக்கே...' என்று ஏதோ நினைத்தான்.

அவன் சைக்கிள் எந்த வீட்டருகிலும் நிற்காமல் பறந்தது. அவன் குமுறி அழ வேண்டிய நிலையை எட்டியிருந்தான்.

அவன் கட்சி மாறியாக வேண்டும்.

ஓ. ஒரு தந்தை!

நியூஸ் ஏஜெண்ட் வீட்டு கடப்பைக் கல்லில்தான் அவன் ஸ்டாண்ட் போட்டான்.




— ஆ. நல்லமுத்து.



## அதற்குள் என்ன அவசரம்?

மூத்த பெண்ணுக்கு முகூர்த்தம் முடிந்து, பெண்ணை அழைத்துச் சென்றார்கள். பெண்ணின் அப்பா பெருமூச்சு விட்டபடி இளைய மகளிடம் சொன்னார். ''எப்படியோ அவ கல்யாணம் ஒரு வழியா முடிஞ்சுது! அடுத்தது.... உனக்கு மாப்பிள்ளை பார்க்கவேண்டும்!''

இளைய மகள் பதில் சொன்னாள், ''எனக்கு இப்போ என்னப்பா அவசரம்? இன்னும் ஒரு மாசம் போகட்டுமே!!!''

— எஸ். பொன்னுசாமி.



# கல்கி

## ஆகஸ்ட் 6ம் ஆண்டு மலரில்...

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் ரூ. 1500 பரிசு பெறும் முதல் பரிசுக் கதை.



## நாற்காலி — முழு நீள நாடகம்

கதை: கி.ராஜநாராயணன்

நாடக ஆக்கம்: கோமல் சுவாமிநாதன்

## பாலகுமாரன் எழுதும்

# இரண்டாவது சூரியன்

— உணர்ச்சிமயமான தொடர்கதை



# வரம்

ஓ, சக்தியின் படமா? ஏதாவது சங்கதி இருக்குமே! நம்பிக்கை பொய்க்கவில்லை. அப்படி இந்த வரத்தினால் பெறப்படுவது யாதெனின் — பெற்றோரின் மிதமிஞ்சிய செல்வத்தில் வளரும் பிள்ளை முள்ளுச் செடியாய் வளர்ந்து பெற்றோரை மட்டுமல்ல; சமுதாயத்தையும் குத்திக் கிழித்துக் குதறியெறிந்து தானும் அழிந்து விடும் என்பதுதான். ஆரம்பத்திலிருந்தே இந்த மெஸேஜ் மனசுக்குள் அப்பிக் கொள்கிற மாதிரி அழுத்தமாகத்தான் படம் பண்ணியிருக்கிறார் கதை, திரைக்கதை, வசன, டைரக்டர் சக்தி.

ரொம்பத் துணிச்சலாகத்தான் இந்தக் கதாநாயக வில்லன் பாத்திரத்தில் தலைகொடுத்திருக்கிறார் பிரபு. இந்த மாதிரி அழிவுச் சித்திரத்துக்குள்ளும் பாசம், நட்பு, காதல் வவகாரங்களில் சில விசித்திரமான மென்மை உணர்வுகள் புதைந்திருப்பதைக் கதாசிரியர் உணர்ந்து சுட்டிக் காட்ட முனைய, பிரபு பூரண ஒத்துழைப்புக் கொடுத்து வெகு நாசூக்காய் வெளிப்படுத்தியிருக்கிறார்.

ஒப்புக் கொள்ள வேண்டியதுதான் — குட்டித் திலகம்தான்.

அமலா இப்படி ஓர் அதிர்ச்சியைத் தருவார் என்று எதிர்பார்க்கவில்லை. ஏதோ குடும்பத்தைக் காப்பாற்ற வேறு வழியின்றித் தான் என்று என்னதான் சமாதானம் சொன்னாலும்... அமலாவைக் காபரே உடுப்பில் மட்டுமல்ல; கவர்ச்சி நடனத்திலும் காணும் போது கூசத்தான் செய்கிறது. ஆனால் நடிப்பில் சோடை போய்விடவில்லை.

முகமே மறந்து போன அந்த முகத்தைப் பார்த்ததும் அத்தனை புராதனத் தயாரிப்பா என்ற வியப்பு மேலிட்டாலும் அந்த



அமெரிக்க ஜெயஸ்ரீ இடம் மாறிப் போய் விட்டாரே என்ற ஏக்கத்தை ஏற்படுத்துகிறார்.

இன்ஸ்பெக்டர் ஜெய்சங்கர் குடும்ப பந்த பாசங்களுக்கும், கடமை உணர்வுகளுக்குமிடையே கடைசிவரை போராடிக் கொண்டிருக்கும் லட்சியப் பாத்திரம். செம்மை. தங்கைஸ்ரீவித்யாவிடம்,'என்பிள்ளை என்ன கொலையா பண்ணிட்டான்னு கேட்டியே, இப்ப அவன் கொலையும் பண்ணிட்டான்,' என்று அழுத்தமாய் கொடுத்துச் சொல்லி விட்டு, அந்த வேதனையை, அவனைக் கைது செய்ய வேண்டிய கட்டாயத்தை வெளிப்படுத்தும் நிர்ப்பந்தத்தைச் சுட்டிக் காட்டும் விதத்தில் அவரின் முதிர்ச்சி தெரிகிறது.

என்னவோ தெரியவில்லை, தாயார் ஸ்ரீவித்யா தன் குழந்தைக்காக வாதாடிச் செல்லம் கொடுக்கும் பால்ய கட்டத்தில் எல்லாம் ஒரு செயற்கைத்தனம் தூக்கலாய்த் தெரிகிறது. ஆனால் வெள்ளாடைப் பருவத்துக்கப்புறம் அவர் நம்மை நெகிழ்த்துவதை ஒப்புக் கொள்ள வேண்டும்.

பிரபுவின் தோழர்களில், நெருக்கம் காட்டும் மகேந்திரன் நாடகத்தனமாய்த் தன் நட்புரிமையை ஆங்காங்கே சிதற விட்டிருக்கிறார். அவரைக் காட்டிலும் குழலும் புத்தகமுமாய் அவர்களுடன் ஒட்டிக் கொண்டு ஆனால் அவர்களின் ஜலக்கிரீடை விவகாரங்களில் ஒட்டாமல் வளைய வரும் அந்த அறிமுக முகம் (எஸ். குமார்?) எடுபடுகிறார்.

காட்டுக்குள் ஆரம்பத்தில் நடக்கும் மனித வேட்டை அமைதிப்படை — புலிப்படைப் போராட்டமா என்பது போல் ஓர் ஐயத்தை ஏற்படுத்துகிறது.

தன் பிள்ளை மாற்றார் கையால் மடியக் கூடாது என்று தானே மடித்து விட்டதாய்ச் சொல்லும் தாய்ப் பாசத்தை நியாயப்படுத்திக் கொள்ள முடியவில்லை.

அர்த்தமுள்ள வரம்தான். அதைக் கொடுக்க ஏன், இத்தனை காலம் (ஜெயஸ்ரீ அமெரிக்காவில் செட்டில் ஆகும் வரை) தடை செய்த 'சக்தி' எதுவோ?

— பி. எஸ். எஸ்.

# மூட்டு வலியா ?
# போக்கிடுங்கள் மூவ் மூலம்.




## முழங்கால் மூட்டு வலியா ?
## பின்புற மூட்டு வலியா ?

உங்கள் உடலின் மூட்டுகள், குறிப்பாக முழங்கால்களிலும் பின்புறமும் வயதானாலோ அல்லது கடின செயல்களினாலோ, இவை வலி ஏற்படும் இடங்களாக விளங்குகின்றன. மூட்டுகளில் லூப்ரிகேட்டிங் திரவம் சுரப்பது குறைவதனால், அதில் உராய்வு ஏற்பட்டு, வலிக்கவும் அசௌகரியத்திற்கும் காரணமாகிறது.

## ஆழ ஊடுருவிச் செல்வது

மூவில் மிக அடர்த்தியான விரைவில் ஆவியாகிற இயற்கை எண்ணெய் அடங்கியுள்ளது. அது சருமத்தின் ஊடே மூட்டுவலி ஏற்படுத்தும் பாகம்வரை ஆழமாக ஊடுருவிச் செல்கிறது.

## விரைந்து செயலாற்றுவது

மூவிலுள்ள இயற்கையான எண்ணெய், அதிக வீரியம் வாய்ந்த நிவாரண சாறுகளைக் கொண்டது — உடனடியாக இரத்த ஓட்டத்தை அதிகரிக்கச் செய்து, லூப்ரிகேட்டிங் திரவத்தை மீட்டுப் பெற்றுத் தந்து, விரைவாக நிவாரணம் அளிக்கிறது.

## நீடித்து செயலாற்றுவது

மூவைத் தடவியதும், இதன் ஒப்பற்ற விதம் 'பார்முலேட்' செய்த 'பேஸ்' இயற்கையான எண்ணெயைத் தொடர்ந்து செலுத்தி, வலிக்கும் இடத்தை நீண்ட நேரம் இளஞ் சூடாகவும், மிருதுவாகவும் விளங்கச் செய்கிறது. இது சருமத்தில் எரிச்சலை உண்டுபண்ணுவதில்லை. வலியற்ற இயக்கத்தை மீண்டும் பெறுகிறீர்கள். நீங்கள் மீண்டும் பழையபடியே ஓடியாடி வேலை செய்யலாம்.

**உண்மையாகவே உடனடி நிவாரணம்**

# மூவ்
**மூட்டு வலி நிவாரணி**

PARAS PHARMACEUTICALS PVT. LTD.
Jotindra Chambers, Ashram Road, AHMEDABAD 380 014

Interact: PPPL:169 : Tam.

28

# சுகபோகத் தீவுகள்

"தேர் நிலைக்குத் திரும்பி விட்டதா?" என்றாள் விநோதினி சிரித்துக் கொண்டே.

"திரும்பியது மட்டுமல்ல... அதன் இடத்துக்குச் சென்று அமைதியாக நின்றும் விட்டது. இனி அதுக்கு அசைவும் இருக்காது. ஆட்டமும் இருக்காது. சிவனே என்று நின்ற இடத்திலேயே இருக்கும்" என்றான் கிருஷ்ணமூர்த்தி. அவனுக்கு முன் மாணவர்கள் எழுதிய கட்டுரைத் தாள்கள் இருந்தன. அவற்றைப் படித்துத் தன் கருத்துக்களைச் சொல்ல வேண்டிய நிலையில் அவன் பணியாற்றிக் கொண்டிருந்தான்.

"டீ போடட்டுமா?"

"போடுங்களேன்... போடேன்."

விநோதினி சிரித்தாள்.

"என்ன தமாஷ்?"

"இல்லை. ஒரு சமயம் 'நீங்கள், வாங்கள், போங்கள்' என்று எட்டி எட்டிப் போய் நிற்கிறீர்கள். சில சமயம் 'நீ, வா, போ' என்று சொல்லி நெருங்கி என் மேல் விழுகிறீர்கள். ஆனால் தேர் நிலைக்குத் திரும்பி வந்து விட்டதாக வேறு சொல்கிறீர்கள். இன்னும் வரவில்லை போல் இருக்கிறதே."

மௌனமாகப் புன்னகை ஒன்றை அவளைப் பார்த்து அனுப்பி விட்டுத் தன் வேலையைத் தொடர்ந்தான் கிருஷ்ணமூர்த்தி.

மாலைக் காலத்துக் கடற்கரை வீட்டுக்குள் நுழைந்து ஆடை, தலைமுடி, தாள்கள் ஆகியவற்றைக் கலைத்தது.

"இந்த வீட்டுக்கு ஃபேனே தேவையில்லை. குளித்துத் தலையைத் துவட்டாமலேயே ஈரம் உலர்ந்து விடுகிறது. எனக்கு எப்போதும் காற்றும் வெளிச்சமும் மிகவும் பிடிக்கும்" என்றாள் விநோதினி.

பள்ளியை ஒட்டியே ஆசிரியர்களுக்கு வீடு அளிக்கப்பட்டிருந்தது. கடற்கரையைப் பார்த்த வீடு. காற்று பிய்த்துக் கொண்டு போகிறது போல, வெளிச்சம் மேலே கவிழ்வது போல் கட்டப்பட்ட குடிசை வீடுகள். குடிசை என்று தோற்றம் தந்தாலும், உள்ளே அனைத்து வசதிகளும் நிறைந்திருந்தன. சுவரை மறைத்திருக்கிற மாதிரி, புத்தகங்களின் வரிசை. கேஸ் அடுப்பு. சிறிய பிரிட்ஜ். ஆடை வைக்க ஓர் அலமாரி. அடக்கமான சுகமான கட்டில். சுத்தமான லோஷன் மணக்கும் பாத்ரூம்.

அது வித்தியாசமான பள்ளிக் கூடம். ஒவ்வொரு வகுப்பிலும் பத்துப் பதினைந்து மாணவர்கள். பதினைந்து மாணவர்களுக்குப் பத்து ஆசிரியர்கள். வகுப்பு என்பதை அறைகளாக அடையாளம் காணாமல், மாணவர்களின் தரத்தினால், தகுதியினால் அடையாளம் கண்டார்கள் பள்ளி நிர்வாகி

பிரபஞ்சன்



கள். ஒரு மேனாட்டுச் செல்வந்தரும், அறிவாளியுமான ஒருவரால் கட்டப்பட்ட முன் மாதிரி பள்ளி அது. கிருஷ்ணமூர்த்தி அதற்குள் நுழைந்த போது அசந்துதான் போனான். ஏனெனில் அந்தப் பள்ளியில் வகுப்பறைகளே இல்லை. ஒரு மிகப் பெரிய ஹால். அதில் ஏராளமான நாற்காலிகளும், எழுது மேஜைகளும் இருந்தன. இதுதான் வகுப்பறை என்றார்கள். மற்றொரு பெரிய அறை சினிமா, மற்றும் நாடக அறை என்றார்கள். அனைத்துக்கும் மேலாக, அங்கு மிகப் பெரியதும், மிகச் சிறந்ததும், உலகத்தின் பல மொழிகளிலிருந்தும் தமிழி லும், ஆங்கிலத்திலும் மொழியாக்கம் செய் யப்பட்ட, மற்றும் அம் மொழிகளில் படைக் கப்பட்ட இலக்கியங்களைக் கொண்ட நூலகம் இருந்தது. பள்ளியைச் சுற்றி மாபெரும் தோட்டம், துரவு இருந்தது. நகரத்துப் பெட்ரோல் காற்று உள்ளே நுழைய முடியாத விதமாக, மிகவும் உள்ளே அடங்கிப் போயிருந்தது பள்ளி. ஒவ்வொரு வகுப்பு மாணவரும் என்னென்ன தெரிந்து கொள்ள வேண்டும் என்பது பாடத் திட் டம். அந்தப் புத்தகச் செய்திகளை, வீடியோ மூலமும், நேராகவும் கற்றுத் தந்தார்கள். மாணவர்கள் நூலகங்களில் தங்கள் பெரும் பாலான நேரத்தைக் கழித்தார்கள். ஐயம் ஏற்படும் போது தங்கள் ஆசிரியர்களை அணுகினார்கள்! ஒவ்வொரு மாணவனும் பன்னிரண்டு ஆண்டு காலமும், பதினைந்து ஆண்டு காலமும் அங்கு பயின்றான். பயின்று வெளியேறும் காலத்தில், இந்திய மொழிகள் இரண்டும், ஐரோப்பிய மொழி கள் இரண்டும், கலைகளில் அல்லது விஞ்ஞானத்தில் ஏதேனும் ஒரு பிரிவில் தேர்ச்சியும் அவர்களுக்கு ஏற்பட்டிருந்தது. விநோதினி வரலாறும், கிருஷ்ணமூர்த்தி தமிழும் போதிக்கும் பொறுப்பை ஏற்றுக்





அருள்வாக்கு

## சின்ன தர்மங்கள் செய்தாலும் போதும்

'வசதியுள்ளவர்களால்தான் பண உதவி செய்து புண்ணியம் பெற முடியும். நாம் என்ன செய்யலாம்?' என்று மற்றவர்கள் எண்ணக் கூடாது. சரீரத்தால் மற்றவர்களுக்குக் கைங்கரியம் செய்வது பெரிய புண்ணியம். அது சித்த சுத்திக்கு ரொம்ப ரொம்ப உதவும். வசதியே இல்லாதவர்களும் இவ்விதத்தில் பிறருக்குச் சரீர சகாயம் செய்ய முடியும்.

ஒவ்வொருத்தரும் — பிறருக்குக் கூடத் தெரிய வேண்டாம் — ஏதோ ஓர் ஒற்றையடிப் பாதைக்குப் போய் அங்கே உள்ள முள்ளை, கண்ணாடியை அப்புறப்படுத்தி வந்தால் போதும். அது சித்த சுத்திக்குப் பெரிய உதவி. இது மாதிரி சின்ன தர்மங்களை எவரும் செய்யலாம். பணக்காரர், ஏழை என்ற வித்தியாசமில்லாமல் ஒரு பேட்டையில் உள்ள அனைவரும் சேர்ந்து குளம் வெட்டலாம்.

'ஈசுவர அநுக்கிரகம் வேண்டும்.' வேண்டும் என்றால் அது எப்படி வரும்? பரோபகாரமான, ஜீவகாருண்யமான நல்ல காரியங்களைச் செய்து செய்து, மனசு பக்குவப்பட்டால்தான், சித்த சுத்தி உண்டாகி, அந்தச் சுத்தமான சித்தத்தில் ஈசுவரனின் உருவத்தைப் பார்க்க முடியும். கலங்கிய ஜலத்தில் பிம்பம் தெரியாததுபோல் நாம் மனசைக் கலக்கிக் கொண்டு ஈஸ்வர ஸ்வரூபம் தெரியாதபடி செய்து கொண்டிருக்கிறோம். பகவத் பக்தியோடு பரோபகாரமும் செய்து மனசு தெளிவாகும்போது ஈசுவரானுக்கிரகத்தை நாம் கிரகித்துக் கொள்ள முடியும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

கொண்டிருந்தார்கள்.

இருவரும் தேநீர் அருந்தினார்கள்.

''விநு! காலம் மிக அழகாக இருக்கிறது. வாயேன், கடற்கரையில் நடந்து விட்டு வரலாம்.''

கதவைச் சாத்திக் கொண்டு அவர்கள் புறப்பட்டார்கள். கூப்பிடு தூரத்தில் இருந்தது கடற்கரை. உலகத்தின் பெரும்பான்மையான இடத்தை ஆக்ரமித்துக் கொண்டிருக்கும் உப்புத் தண்ணீர். மக்களின் அழுக்குப் பாதங்கள் படாததால் இன்னும் அழுக்குப் படாததாய் இருந்தது கடல் மண்.

''மூர்த்தி! உங்களை ஒன்று கேட்க வேண்டும் என்று நாம் இங்கு வந்து சேர்ந்த கடந்த ஆறு மாத காலமாய் யோசித்துக் கொண்டிருக்கிறேன்!''

''கேளேன்.''

''சௌகரியமாக, அந்தஸ்துடன் இருந்த உங்களை இந்தப் பட்டிக்காட்டுக்கு அழைத்து வந்து விட்டதில், உங்களுக்கு ஏதேனும் வருத்தம் உண்டா? எனக்குப் பல சமயங்களில் ஒரு வகைக் குற்ற மனப்பான்மை கூட உண்டாகிறது.''

கிருஷ்ணமூர்த்தி யோசித்தபடி இருந்தான்.

''அப்படி இல்லை விநு... இங்கு வந்த பிறகுதான், வாழ்க்கை எவ்வளவு சாரம் கொண்டதாய் இருக்கிறது என்பதையே நான் புரிந்து கொண்டேன். ஜரிகை அங்கவஸ்திரம் என்று ஒரு வகைத் துண்டைச் சொல்வார்கள். கேள்விப்பட்டிருக்கிறாயா? அதைத் துண்டாகப் பயன்படுத்த முடியாது. சும்மா தோளுக்கு அலங்காரமாக அது இருக்கும். அது மாதிரிதான் என் சென்னை வாழ்க்கையும். எனக்கே நான் பயன்படாமல், யாருடைய பினாமியாகவோ வாழ்ந்து கொண்டு, சீ.. எவ்வளவு பெரிய இழி வாழ்க்கை. பணம், அந்தஸ்து, மரியாதை, எல்லாம் ஆடம்பரமாகவே கிடைத்தது. ஆனால் என்ன பயன்? அமைதி மட்டும் இல்லையே. என்ன விலை கொடுத்து எந்த இடத்தில் இதை நான் வாங்க முடியும். நீயே சொல். விநு! நீ மட்டும் என் வாழ்க்கையில் நுழையவில்லையென்றால், நான் எப்படியோ வீணாய்ப் போய் இருப்பேன். நீ, நான் செய்த புண்ணியத்தின் விளைவு. அதிர்ஷ்டத்தின் பயன். எனக்கு நீதான் எல்லாம். உன்னை விட விலைமதிப்புள்ள ஒன்று எனக்கு ஒரு போதும் கிடைக்கப் போவதில்லை.''

அவன் கண்கள் கலங்கியிருந்தன. அவள், அவனைத் தேற்றும் முகத்தான், அவன் கைகளை எடுத்துத் தன் கைகளுக்குள் புதைத்துக் கொண்டாள்.

பழம், ஓர் இனிப்புக் கட்டியைப் போல் இருந்தது.

அவன் சொன்னான்.

''விநு, எப்படி ஓர் அற்புதமான இடத்தில், என்னைக் கொண்டு வந்து சேர்க்க முடிந்தது? நான் என் வாழ்க்கை எப்படி

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...




உங்களுக்கும் உங்களது முன்னேற்றத்திற்கும் இடையில் இப்பொழுது உள்ள தூரம் ஒரு போஸ்ட் கார்டு தான் என்று நாங்கள் கூறினால் அது சற்று மிகையாகத் தோன்றும். ஆனால் உண்மை அதுதான்.

நீங்கள் வாழ்க்கையில் முன்னேறுவதற்கு ஆங்கில மொழியில் போதிய பயிற்சியின்மை ஒரு தடையாக இருந்திருந்தால்........

மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசும் போது அதை ஓரளவு புரிந்து கொண்டும், அதற்கு ஆங்கிலத்திலேயே பதிலளிக்க முடியவில்லையே என்ற குறை உங்களிடம் குடி கொண்டிருந்தால்,

பல புத்தகங்களைப் படித்தும் ஆங்கிலத்தில் பேச முடியவில்லையே என்ற சலிப்பு உங்களுக்கு ஏற்பட்டிருந்தால்,

நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற்றத்தை இப்பொழுது அடைய ஒரே ஒரு போஸ்ட்கார்டுபோதும்...ஆமாம்!

ஆங்கிலத்தில் இலக்கணப் பிழையின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத வேண்டும், தயக்க மின்றி சரளமாகப் பேசவேண்டும் என்ற உங்களது விருப்பத்தை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்று போற்றப்படும் விவேகானந்தா கல்வி நிலையத் திற்கு இன்றே அனுப்புங்கள்.

நீங்கள் மேற்கொள்ள வேண்டிய பயிற்சியைப் பற்றியும் மற்ற தகவல்களையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைப்பார்கள்.

வீட்டிலிருந்த படியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இந்த எளிய பயிற்சி முறையை நீங்கள் மேற்கொள்ளலாம்.

"நேர்முகப்பயிற்சியும் உண்டு."

என்ன?.....எங்கே கிளம்பி விட்டீர்கள்? போஸ்ட் கார்டு வாங்கத்தானே?

உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி துவங்கிவிட்டது.

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**9, மேட்லி ரோடு,**
**தி. நகர், சென்னை - 17.**

NAGA



டிரில்—மாஸ்டர்: ஏண்டா பயலே! நேற்று இடது காலிலே கட்டுப்போட்டிருந்தே. இன்னிக்கு வலது காலிலே கட்டுப் போட்டிருக்கியே, என்ன சங்கதி?

மாணவன்: புறப்படற அவசரத்திலே... நேற்று எந்தக் காலிலே கட்டுப் போட்டிருந்தோம்கறது மறந்து போச்சு சார்...!

— பெ. கந்தசாமி.

---



அவள்: உன் காதலர் ரொம்ப முன் ஜாக்கிரதைப் பேர்வழிங்கறையே, ஏன்?

இவள்: வீட்டை விட்டு அவரோட நான் ஓடி வர்றதுக்கு முன்னாடி, எஸ்.எஸ்.எல்.சி., புக்கைக் கொண்டு வரச் சொல்லி, நான் மேஜராயிட்டேனாங்கறதை முதலில் உறுதிப்படுத்திக்கிட்டாரே!

— கரம்.

---

"கதை, வசனம், டைரக்ஷன், பாடல்கள், மெயின் ரோல் எல்லாப் பொறுப்புக்களையும் நானே ஏத்துக்கிட்டு ஒரு சினிமா தயாரிக்கலாம்னு நினைக்கிறேன். நீங்க என்ன சொல்றீங்க?"

"படத்தைப் பார்க்கிற பொறுப்பையும் நீங்களே எடுத்துக்கிட்டா நல்லது."

— எஸ். ராஜகோபாலன்.



இருக்க வேண்டும் என்று, மாமாவிடம் போவதற்கு முன்னால், கற்பனை செய்திருந்தேனோ, அந்த வாழ்க்கையே எனக்குக் கிடைத்திருக்கிறது, விநு. இப்போதுதான் அலமாரிக்குள் புத்தகங்களாக உறங்கிக் கொண்டிருந்த விவேகானந்தரையும், வள்ளுவரையும், பாரதியையும் என் மாணவர்களிடமும், எனக்குள்ளும் ஜீவனுடன் உலவச் செய்ய முடிகிறது. எனக்கும், நான் கற்ற கல்விக்கும், இப்போதுதான் நியாயம் செய்ய முடிகிறது. இந்த வாழ்க்கையில் லஞ்சம் இல்லை. பொய் இல்லை. அப்பப்பா! எவ்வளவு பெரிய நிம்மதி?"

அவன் மண்ணில் மல்லாந்து படுத்தான். வானத்தில் கணக்கற்று நிறைந்திருந்த நட்சத்திரங்களைக் கண்டான். வெளுத்துப் போய்ப் புறப்படும் வெண்ணிலவைக் கண்டான்.

அவள் அவன் தலையைக் கலைத்துக் கொண்டு அமர்ந்திருந்தாள். அவன் பரவசத்தில், இரண்டு கண்களையும் மூடிக் கொண்டு படுத்திருந்தான்.

"விநு!"

"சொல்லுங்கள்."

"கோகிலா கடிதம் எழுதியிருந்தாரா?"

"உம்... அம்மாவிடமிருந்து நேற்று கூட கடிதம் வந்திருந்தது. 'என்னை மாதிரி இல்லாமல், உனக்கு ஒரு நல்ல பணியும், நல்ல துணையும் கிடைத்திருக்கிறது. சந்தோஷமாக இரு' என்று எழுதியிருந்தாள்."

"உன் அம்மாவை நினைத்தால்தான் கவலையாக இருக்கிறது."

"அவசியம் இல்லை. அம்மா, பொருளாதாரத்திலோ, மற்ற வசதிகளிலோ பின் அடையவில்லை. அவள் எம்மாதிரி வாழ்க்கையை வாழ வேண்டும் என்று நினைத்திருந்தாளோ, அது அவளுக்குக் கிடைத்திருக்கிறது."

"நான் கூடக் கேட்டேன். மாமாவுக்கு அந்த அடையாறு பங்களாவை நான் கொடுத்து விட்டபோதே, கோகிலாவுக்கும் நான் ஏதாவது செய்ய முடியுமா என்று யோசித்தேன். ஆனால், அவரிடம் இல்லாதது எதுவும் இல்லை. எதைக் கொடுப்பது என்று யோசனையிலேயே இருந்து விட்டேன்."

"அடுத்த விடுமுறைக்கு அத்தை மாமாவைச் சென்று பார்த்து விட்டு வருவோமா?"

"அப்பாவும் அம்மாவும் ரொம்ப சந்தோஷத்தில் இருக்கிறார்கள். தங்கைக்கு வாய்த்தவர் நல்லவராக அமைந்து விட்டார்."

"இல்லை. அவரை விட எனக்கு வாய்த்தவர்தான் ரொம்ப நல்லவர்."

இருவரும் சிரித்தார்கள். கடல் ஆரவாரித்தவண்ணம் இருந்தது.

(முற்றும்)



* உதட்டிலே பாடல், கையிலே சுறுசுறுப்பு, பையிலே சில்லறை!

# சத்திய

"ஏனுங்க சத்தி வந்திடுச்சுல்லே எறங் கலீங்களா?'' என்று கண்டக்டர் கேட்டவுடன்தான் சட்டென்று வெளியில் எட்டிப் பார்த்தோம். சுற்றிலும் சோளக் காடு, நடுவில் பொட்டல் காடு — அதுதான் சத்திய மங்கலத்தின் (தற்காலிக) பஸ் நிலையம்! இறங்கியதும் ஒரு நோட்டம் விட்டால், சுற்றிலும் தென்னங்கீற்றால் வேயப்பட்ட குடிசைக் கடைகள்! இரண்டு 'பர்லாங்' நடந்த பின்புதான் 'ஒரு ஊரின்' சாயலே தெரிகின்றது.

உச்சி வகிடு எடுத்தது மாதிரி ஊரின் நடுவில் பவானி ஆறு ஓடுகிறது. ஆற்றங் கரையில் பவானீஸ்வரர் ஆலயம் மிக அற்புதமாய் ஆற்று நீரில் நிழலாய் தெரிந்து கொண்டிருந்தது. எட்டு அடி பள்ளத்தில் மிகத் தாழ்வாய் இருந்த கோவிலைச் சமீபத்தில்தான் பதினான்கு அடிக்கு உயர்த்தி, அதற்கு மேல் பதினான்கு அடி கோபுரம்

* சபியுல்லா — ''எந்த விதத்துல நியாயம்...?''





* பஸ் நிலையப் பணிகள் — விரைவில் முடியும்?

* சாமி கவுண்டர்



* பவானீஸ்வரர் கோவில்.



எழுப்பி, கும்பாபிஷேகம் செய்துள்ளார்கள். தம் சொந்தப் பணம் சுமார் பதினேழு லட்சமும் தம் முழு நேர உழைப்பையும் இந்தக் கோவிலுக்குக் காணிக்கையாக்கியுள்ளார் பி. என். பழனிச்சாமி கவுண்டர்! இதே போல் வேறு சிலரும் தங்களால் முடிந்த அளவு இந்தக் கோவிலுக்கு உதவியுள்ளார்கள்.

''அப்படியே ரைட்டுலெ திரும்பிப் பாருங்க. பெரிய கோட்டைச் சுவர் தெரியுதுங்களா! அதானுங்க திப்பு சுல்தானோட கோட்டை. திப்பு மைசூரை ஆண்ட போது இங்கே தானுங்க ஆயுதத் தொழிற்சாலை வைச்சிருந்தார். இங்கே இருந்துதானுங்க கிழக்கிந்தியக் கம்பெனிக்குக் கூட ஆயுதம் சப்ளை ஆச்சு! சுற்றுச் சுவர் பார்த்தீங்களா எம்மாம் பெரிசுன்னு! இப்படி வந்து பாருங்க கோட்டை முழுசும் தெரியும்'' என்று சுற்றிக் காட்டினார் ஊர்ப் பிரமுகர்



* 'மணிக்கூண்டு பக்கம் முன்னாலே வந்துக்கங்க...'

# மங்கலத்தைச் சுற்றி...





* பழனிச்சாமி — குழப்பம் தீர்ந்தது!



* சீனிவாச பட்டர் — எம்.ஏ. பி.எட். அர்ச்சகர்.

சதந் — கண்ணப்பன்.

திப்புசுல்தானின் ஆயுதத் தொழிற்சாலை இப்போது மூன்று போகப் பயிர் விளையும் பூமியாக இருக்கிறது!

''கோட்டை கோபுரம்னு மட்டும் பார்த்துட்டுப் போயிடாதீக என்ற ஊர்லெ பஸ் ஸ்டாப் பெரிய பிரச்னை. அதையும் கொஞ்சம் பாருங்க'' என்று ஓர் ஆசாமி முணுமுணுத்தவுடன் நகர் மன்றத் தலைவர் கே. எஸ். பழனிச்சாமி (அ.தி.மு.க.) அவர்களைச் சந்திக்கச் சென்றோம்.

''வாங்க... வாங்க... நல்ல நேரத்துலே தான் வந்திருக்கீங்க'' என்று ஆரம்பித்தார்




* பண்ணாரி மாரியம்மன் கோவிலின் 'அன்பு இல்லம்.'



அவர். "நேற்று வந்திருந்தா இன்னும் நல்லா இருந்திருக்கும். நகர சபைக் கூட்டத்துல ரொம்ப ரகளையாப் போச்சு! பஸ் நிலையம் புதுசாக் கட்டுவதற்குத் தனியாரிடம் இரண்டு ஏக்கர் நிலம் வாங்கி இப்ப வேலை நடந்துக்கிட்டிருக்குங்க.. ஆச்சுங்களா! ஆனால் நகரம் வளர்ச்சியடைந்திட்டு வருது பஸ் நிலையத்தைச் சுற்றிலும் கட்டடங்கள் வந்திடும்; பின்பு பஸ் நிலையத்தை விரிவுபடுத்த முடியாது என்று, அந்த நிலத்தை ஒட்டியே கூடுதலாக இரண்டு ஏக்கர் அறுபது சென்ட் நிலம் சேர்த்து வாங்கி விடவேண்டும் என்று நகர சபை தீர்மானம் ஒன்றினை நிறைவேற்றியதுங்க. அதன்படி அந்த நிலத்தின் சொந்தக்காரர்களுக்கும் செய்தி சொல்லப்பட்டது. அவங்க என்னடான்னா இரண்டு ஏக்கர் அறுபது சென்ட் நிலம் எல்லாம் தர முடியாது. வேண்டுமானால் 1.60 சென்ட் தருகின்றோம் என்கிறாங்க. நிலச் சொந்தக்காரர்கள் இந்தத் தொகுதி தி.மு.க. எம்.எல்.ஏ. டி. கே. சுப்பிரமணியத்துக்கு வேண்டப்பட்டவங்க. நான் எலெக்ஷன்லே அவரை எதிர்த்துப் போட்டியிட்டுக் குறைந்த ஓட்டுலே தோல்வியடைந்தேன். அதனாலே என்னோட இந்த நல்ல திட்டத்தினைச் செயல்படுத்த விடாமல் எம்.எல்.ஏ.வும் மற்ற சிலரும் தடுக்கிறாங்க. நேற்று எம்.எல்.ஏ. நகர சபைக் கூட்டத்துக்கு வந்தாருங்க. வரதுக்கு முன்னதாகவே எல்லாக் கவுன்சிலர்களையும் சந்தித்துப் பேசினதாகச் சொன்னாங்க.

"திடீரென்று எங்கள் அ.தி.மு.க. கவுன்சிலர்கள் உட்பட பெரும்பான்மையான கவுன்சிலர்கள் தனியாரிடமிருந்து 2.60 சென்ட் நிலத்தினை நகராட்சி வாங்கும் தீர்மானத்தை ரத்து செய்ய வேண்டும் என்று கையெழுத்திட்டு ஒரு தீர்மானம் இயற்றினாங்க. இந்தத் தீர்மானத்தினை நிறைவேற்றினா இந்த ஊருக்கு பஸ் நிலையமே சாத்தியமில்லைங்க. மக்கள்தான் அவதிப்படணும்! எப்படித்தான் திடீரென்று எல்லாக் கவுன்சிலர்களும் மாறிப் போயிட்டாங்களுதான் தெரியலே. குழம்பிட்டிருக்கேங்க" என்றார்.

இது பற்றித் தி.மு.க. கவுன்சிலர் கே. ஆர். சபியுல்லா என்ன சொல்கின்றார் என்று கேட்டோம்:

"இதுலே சேர்மன்தான் வீம்பு செய்கின்றார். தனியார் நிலத்தை அப்படியே எடுக்கணும் என்பது எந்த விதத்துல நியாயமுங்க... இதுல கூட ஓர் உள் நோக்கம் இருப்பதாகப் பேசிக்கிறாங்க... பொது



வாக பஸ் நிலையத்தைச் சுற்றிலும் உள்ள இடங்கள் நல்ல விலைக்குப் போகும். வெளியிலே பிளாட் போட்டு விற்றால் முப்பது லட்சத்திற்கு மேல் விற்கலாம். அதையே நகராட்சி எடுத்துக்கிட்டா 1 லட்சத்து 80 ஆயிரம்தானே தரும்?'' என்றார்.

விஷயம் இப்படிப் போக அந்தப் பகுதி மக்களுக்கு இதில் எல்லாம் கவனம் இருப்பதாகவே தெரியவில்லை! மேற்படி நிலத்தின் உரிமையாளர்களில் ஒருவரான எஸ். பி. சாமிக்கவுண்டரின் வீட்டிற்குச் சென்று கதவைத் தட்டினோம். அறிமுகம் செய்து கொண்டவுடன் இயல்பாய்ப் பேசத் துவங்கினார்.

''சேர்மன் மாற்றுக் கட்சிக்காரர்தான் சார்! ஆனால் நேர்மையானவர். ஊர்லே ஏதாவது பேசினா நம்ப வேண்டாம். ஆனால் நாங்க எலெக்ஷன்லே அவரை எதிர்த்து வேலை செய்தோம்ங்கற கோபம் இருக்கலாம். அதான் எங்க நிலத்தை பஸ் ஸ்டாப் கட்ட எடுத்தே தீருவேன்னு சொல்லுறாரே! போகட்டும் சார் நீங்க சொன்னது போல் ஊருக்கு நல்லது பண்ணியதாகவே இருக்கட்டும். அவர் கேட்பது போலவே கூடுதலாக 2.60 செண்ட் நிலம் தருகிறோம். ஆனால் கூடிய விரைவில்' பத்திரம் முடித்துக் கொண்டால் சரி'' என்று அவர் கூற, பவானி ஆற்றுத் தண்ணீர் மாதிரி ஜிலுஜிலுப்பாய் ஓடிப் போய் சேர்மனிடம் செய்தி சொன்னோம். கூடிய விரைவில் கவுன்சிலர்களைக் கூட்டிப் பேசி ஒரு நல்ல முடிவைச் சத்தி மக்களுக்குத் தருகின்றோம் என்றார்! — நம்புவோமாக!

சத்தியமங்கலத்தின் புதிய அரசு மருத்துவமனை மிக அழகாகக் கட்டப்பட்டுள்ளது. நல்ல ஆபரேஷன் தியேட்டர்... சிறந்த சிகிச்சை நிபுணர்கள். சுத்தமான படுக்கை வசதி. இரைச்சலோ, இடைஞ்சலோ துளி கூடக் கிடையாது! கூப்பிட்ட குரலுக்கு ஓடி வர நிறைய நர்ஸுகள்!!



* வரதராஜன் — ''இரண்டு வேளையும் பஸ் விடலாம்.''

இருந்தும் என்ன பிரயோஜனம்? நோயாளிகளே வருவதில்லையே! அதற்காக மக்கள் எல்லாம் ஆரோக்கியமானவர்கள் என்று நினைத்து விட வேண்டாம்! மருத்துவமனை ஓர் உச்சிக் காட்டில் இருப்பதுதான் காரணம்! ('அதோ தெரியுது பாருங்க அதுதானுங்க என்ற ஆஸ்பத்திரி' என்று தரையிலிருந்து அண்ணாந்துதான் அடையாளம் காட்டினார்கள்!) '86 இல் பெரியார் மாவட்டச் சுற்றுப் பயணத்தின் போதே சத்தி மக்கள் இவ்வளவு தொலைவில் ஆஸ்பத்திரி கட்டப்பட்டு வருவது குறித்து வருத்தம் தெரிவித்திருந்தார்கள். ஆஸ்பத்திரிக்குப் போக டவுனிலிருந்து இப்போது பஸ் வசதியே இல்லை. ஊருக்குள்ளிருந்து நோயாளியை ஆட்டோவிலோ டாக்ஸியிலோ அழைத்து வரும் வசதி இருப்பினும் ஆஸ்பத்திரிக்கு வந்து சேருவதற்குள் நோயாளி ஆடிப் போய் விடுவார். தீவிர நோயாய் இருந்தால் உயிருக்கே அபாயம். அந்த அளவுக்கு மகா மோசமான சாலை!

இது பற்றி அந்த மருத்துவமனை அதிகாரி டாக்டர். கே. எஸ். வரதராஜன் அவர்களிடம் பேசிய போது ஒரு யோசனை கூறினார். ''ஊருக்குள்ளிருந்து காலை இரண்டு ட்ரிப், மாலை இரண்டு ட்ரிப் ஸ்பெஷல் பஸ் விட்டு நோயாளிகளுக்கு அரசு உதவ வேண்டும். குறைந்தபட்சம் இந்த உதவியையாவது செய்ய வேண்டும்'' என்றார்! நல்ல யோசனைதானே?

ஆஸ்பத்திரி பார்த்து விட்டு அந்தோணி ரோட்டில் நடந்து வந்தோம். வழி நெடுகிலும் மூங்கில் கூடை பின்னும் தொழிலாளர்கள். அவர்கள் உதடுகள் மெல்லியதாய் சினிமாப் பாடல்களை முணுமுணுத்துக் கொண்டே இருக்க. விரல்கள் என்ன வேகமாய் விளையாடுகின்றன! கேரளாவிலிருந்து கூட்டாய் பாத்திக் கத்தைகள் வாங்கிப் பிரித்துக் கொண்டு தனித் தனியாகச் செயல்படுகின்றார்கள். அசராத உழைப்பு, சுருக்குப் பை நிறைந்த சந்தோஷத்தில் சுகமான பாட்டு. பின்னி முடிக்கப்பட்ட கூடைகள் மைசூர், கேரளம், மற்றும் தமிழ் நாடு முழுவதுவும் விற்பனைக்குச் செல்கின்றனவாம்.

''அரசு எங்களைக் கண்டு கொள்ளுவதே இல்லை. யார் யாருக்கோ அள்ளிக் கொடுக்கின்ற அரசு எங்களுக்கும் ஏதாவது ஒரு சலுகை பண்ணப்படாதாங்க...?'' என்று வழி



* நோயாளிகள் இல்லாத மருத்துவமனை.



* பவானிசாகர் அணை

மறித்துக் கேட்டார் கூடை பின்னிய சுப்பாயான்! கூடவே ஒரு வேண்டுகோள்: ''கண்டிப்பாகப் பண்ணாரி மாரியம்மன் கோவிலுக்குப் போயிட்டுப் போங்க...!''

மறுநாள் மைசூர் பஸ் ஏறிப் பண்ணாரி சென்றோம்.

**ச**த்தியிலிருந்து பன்னிரண்டு கி.மீ. தொலைவில் கர்நாடக மாநில எல்லையில் மிக ரம்மியமான மலைப்பிரதேசத்தில் பண்ணாரி மாரியம்மன் கோவில்! மரங்களின் சலசலப்பைத் தவிர வேறு ஓசையில்லை. மகா அமைதி! தமிழகத்தில் மட்டுமல்ல கேரளம், மைசூர் பகுதிகளிலிருந்தும் பக்தர்கள் சர்வசாதாரணமாக வந்து போகின்றார்கள்.

அந்தப் பகுதிகளில் செல்கின்ற எல்லா வாகனங்களும் நின்று அம்மனிடம் ஆசி பெற்றுத்தான் செல்கின்றன! ஒவ்வொரு பங்குனி மாதமும் பௌர்ணமியையொட்டி வருகின்ற திங்கள் கிழமை அம்மனுக்கு விசேஷம்! முப்பது அடி நீளம் உள்ள (நெருப்)பூக் குழிக்குள் பக்தியுடன் சுமார் ஒரு லட்சம் பக்தர்கள் நடப்பார்களாம். மறு தினம் ஏறக்குறைய அதே அளவு கால்நடைகள் (நெருப்)பூக் குழி இறங்குமாம்!!

''இது மிகவும் சக்திவாய்ந்த தெய்வமுங்க! வேண்டிய வரம் நிச்சயம் கிடைக்கும். மற்ற மதத்தவர்களும் கூட வேண்டுவதுண்டு. இந்தக் கோவிலுக்கு ஆண்டுக்குச் சுமார் 41 லட்சம் வருமானம் வருகின்றது. ஓர் அனாதை (அன்பு) இல்லமும், ஒரு சித்த வைத்திய சாலையும் கோவில் பணத்தில் இயங்குகின்றன. இந்தப் பகுதியில் பெண்களுக்குக் கல்லூரியே கிடையாது. கோவில் வருமானத்தில் ஒரு பெண்கள் கல்லூரி கட்ட வேண்டும், கோவிலுக்குச் சுற்றுச் சுவர் எடுக்க வேண்டும்'' என்கிறார் முன்னாள் அறங்காவலர் கண்ணப்பன்!

**ப**ண்ணாரிக்கு மிகச் சமீபத்தில்தான் பவானி சாகர் அணைக்கட்டு. 1955 ஜவகர்லால் நேருவால் திறக்கப்பட்டது. அணைக்கட்டின் உச்சியிலிருந்து பார்த்தால் ஏறக்குறைய குட்டி சொர்க்கத்தை எட்டிப் பார்த்த திருப்தி! தெளிந்து வளைந்து ஓடுகின்ற பவானியைச் சுற்றித்தான் எத்தனை பசுமை! அந்தப் பசுமைக்குப் பின்னால் கம்பீரமான மலைத் தொடர்கள். தற்போது இந்த அணையில் மின்சாரம் உற்பத்தி செய்யும் வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன. ஜப்பான் எட்டு மெகாவாட் உற்பத்தித் திறன் கொண்ட நான்கு இயந்திரங்களை சப்ளை செய்துள்ளது. இரண்டு ஜப்பானிய இஞ்ஜினியர்களின் மேற்பார்வையில், வேலைகள் முடியும் தருவாயில் உள்ளன.

**தி**ப்புசுல்தான் ரங்கநாதரின் பக்தர் என்பது எத்தனை பேருக்குத் தெரிந்த செய்தியாக இருக்கும்! ஸ்ரீ வேணுகோபால சுவாமி கோவில் அர்ச்சகர் சீனிவாச பட்டர் சொன்ன புதிய செய்தி: இந்தக் கோவிலில் உள்ள எல்லாச் சிலைகளையும் திப்புதான் பின்னம் (காயம்) செய்து விட்டுப் போயிருக்கிறார். ஆனால் ரங்கநாதரை மட்டும் தொடவே இல்லை! அதுமட்டுமல்ல ரங்கநாதர் சந்நிதியிலிருந்து திப்பு சுல்தான் அரண்மனைக்கு ஒரு சுரங்கப் பாதை உண்டு! சுரங்கப் பாதையைத் திறந்து காட்டினார்கள். மையிருட்டு! விளக்கை உள்ளே கொண்டு போனால் பட்டென்று அணைந்து போகின்றது! இங்கு மட்டுமல்ல; திப்புவின் அரண்மனை உள்ள எல்லாப் பகுதிகளிலும் அரண்மனைக்கும் பக்கத்தில் உள்ள ரங்கநாதர் ஆலயத்திற்கும் ஒரு சுரங்கப்பாதை இருக்குமாம்!

''சத்தியமங்கலம்'' என்ற பெயர் எப்படி வந்தது என்பதற்கும் ஒரு விளக்கம் கொடுத்தார் பட்டர். இந்த ஊர் மக்கள் சத்தியத்திற்குக் கட்டுப்பட்டவர்கள். மாடும் புலியும் ஒரே குளத்தில் ஒன்றாகத் தண்ணீர் குடித்ததாம். எனவே 'சத்திய'மங்கலம் என்று பெயர் வைத்தார்களாம். தற்போது 'சத்தி' என்று செல்லமாக அழைக்கின்றார்கள்!

இந்த இடத்தில் சீனிவாச பட்டரைப் பற்றி ஒரு வரி சொல்லியாக வேண்டும். எம்.ஏ.பி.எட். படித்து விட்டுப் பெண்கள் மேல்நிலைப் பள்ளியின் உதவித் தலைமை ஆசிரியராகவும் பகுதி நேர அர்ச்சகராகவும் பணியாற்றுகின்றார்!

**ச**த்தியில் பண்ணாரி மாரியம்மன் சர்க்கரைத் தொழிற்சாலை ஒன்று இயங்குகிறது. விவசாயிகளுக்கு முன்பணம் வழங்கி அவர்களின் கரும்பு விவசாயத்துக்கு உதவுகின்றார்கள் ஆலை நிர்வாகத்தினர். பின்பு நேரடியாக அவர்களே தொழிற்சாலைக்குத் தேவையான கரும்பினை அறுவடை செய்து கொண்டு அதற்கான பணத்தினை விவசாயிகளுக்குக் கொடுத்து வருகின்றார்கள். இதனால் விவசாயிகளுக்கு எந்தச் சிரமமும் இல்லையாம்! நல்ல லாபம்தானாம். இந்த விவரத்தினைச் சொன்ன விவசாயி, ''உன்ற கல்கிலே தானுங்க என்ற ஊர் மணிக்கூண்டு பத்தி முன்னாலே வந்துச்சுக. அப்புறம் தானுங்க கூண்டைச் செப்பனிட்டுக் கடிகாரத்தை ஓட்டி வுட்டாக... இப்ப பாருங்க'' என்றார். இரண்டு முட்களும் ஒன்றோடு ஒன்றாய்ப் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தன!

''அதோட இன்னும் ஒண்ணையும் சேர்த்து எழுதுங்க — என்ற ஊர்லே ஒரு தியேட்டர்லே ஒரு ரூபா டிக்கெட் வாங்கினாலும் தரையிலே தானுங்க உட்காரணும். கொடும்மைங்க.. இதையும் எழுதுங்க...'' என்றார்.

— பாரதிபாலன்

படங்கள்: ஸ்ரீஹரி.

# ஸ்ரீதேவியைக் காணோமே!

### ''ராஜ் ராஜ் பஞ்சாயத் ராஜ்''

00 டெக் போட்டு நாங்கள் ''மக்கள் என் பக்கம்'' படம் பார்த்துக் கொண்டிருந்த பொழுது, அதில் ''ராஜ் ராஜ் சாம்ராஜ்'' என்ற பாடல் ஒலித்தது. எங்கள் உறவினர் பையன் — உறங்கிக் கொண்டு இருந்தவன் — திடீரென எழுந்து, ''ராஜ் ராஜ் பஞ்சாயத் ராஜ்'' என்று கூடவே பாட ஆரம்பித்து விட்டான். வீடே சிரிப்பில் ஆழ்ந்தது.

— எஸ். ஷீலா, சந்தவாசல்.

### நாட்டுக்காகப் போராட்டம்!

00 வீடியோவில் 'ஜான்சி ராணி' படம் பார்த்துக் கொண்டிருந்தோம். கடைசியில் வரும் சண்டைக் காட்சிகளில் இந்திய வீரர்கள் அடிபட்டு உயிர் இழக்கும் நிலையிலும், கையில் கிடைக்கும் ஆயுதங்களைக் கொண்டு ஆவேசமாக வெள்ளைக்காரச் சிப்பாய்களைக் கொன்று விட்டுச் சாகின்றனர்.

என் ஆறு வயது மகன், ''இந்திய வீரர்கள் மட்டும் சாவதற்கு முன் வரை வெள்ளைச் சிப்பாய்களைக் கொல்கிறார்கள். ஆனால் வெள்ளைக்காரர்கள் மட்டும் அடிபட்டவுடன் கீழே விழுந்து விடுகிறார்களே! ஏன்?'' என்றான்.

உடனே என் ஒன்பது வயது மகன், ''அது ஏன்னா, நம் வீரர்கள் நாட்டுக்காகப் போராடினாங்க. வெள்ளைச் சிப்பாய்கள் கூலிக்காகப் போராடினாங்க!'' என்றானே பார்க்கலாம்! நாங்களே வாயடைத்து நின்றோம்!

எஸ். வத்சலா கணேசன், சென்னை—75.

### தங்கவேலுவுக்கு நன்றி!

00 என் நண்பனின் அக்காவைப் பெண் பார்க்க, மாப்பிள்ளை வீட்டார் வந்திருந்தனர். பெண்ணைப் பக்கத்து வீட்டில் உட்கார வைத்திருந்தோம். பொழுது போக, அந்த வீட்டில் இருந்த வீடியோவில் 'தங்கவேலு ஜோக்ஸ் கேசட்'டைப் போட்டிருந்தோம். சிறிது நேரம் சென்றதும், மாப்பிள்ளை வீட்டாரிடம் சலசலப்பு. காரணம் மாப்பிள்ளை அங்கு இல்லாததுதான். எல்லோரும் தேட, கடைசியில் மாப்பிள்ளை பக்கத்து வீட்டில் இருப்பது தெரிய வந்தது. 'என்னடா? அதுக்குள்ளே ஓரம் கட்டறயே?' என மாப்பிள்ளையின் நண்பர் 'கமெண்ட்' அடிக்க,

ஹி... ஹி...! அதெல்லாம் இல்லேடா! உனக்குத்தான், தெரியுமே — தங்கவேலுன்னா, எனக்கு உயிர்னு! பக்கத்து வீட்லேர்ந்து, தங்கவேலு குரல் வந்தது. அதான் போனேன். போன பிறகுதான் தெரிஞ்சுது... ஹி... ஹி... அது சரி! எப்ப நாள் பார்த்து இருக்கீங்க?' என சர்வசாதாரணமாய் அவர் பேச, எங்களுக்குச் சொல்லி முடியாத குஷி! மனமாரத் தங்கவேலுவுக்கு நன்றி சொன்னோம்!

— எஸ். ராஜா, குத்தாலம்.




### எங்கே ஸ்ரீதேவி?

00 என் நண்பன் ஸ்ரீதேவியின் பரம ரசிகன். 2.7.89 ஞாயிறன்று மதியம் ஒளி



பரப்பப்பட்ட தெலுங்குப் படத்தில் ஸ்ரீதேவி நடிப்பதாகச் சொல்லி அவனை என் வீட்டிற்கு வரச் சொன்னேன்.

அரை மணி நேரம் கழித்து படத்தைப் பார்த்துக் கொண்டிருந்த என் நண்பன் 'எங்கேடா ஸ்ரீதேவி? ஸ்ரீதேவியைக் காணோமே' என்று அங்கலாய்த்தான்.

நான் நாகையாவின் வளர்ப்பு மகளாக நடிக்கும் குழந்தை ஸ்ரீதேவியைக் காண்பித்தேன். '70—இல் எடுத்த படத்தில் ஸ்ரீதேவி குழந்தையாகத்தானேடா நடிக்க முடியும்' என்று நான் கூறியதும் என் நண்பன் முகத்தில் கல அசடு வழிந்தது.

— ஆர். கோபாலன், ஸ்ரீரங்கம்.

## கண்டுபிடிச்சேன்! கண்டுபிடிச்சேன்!

OO டீ. வி. யில் ''குரு சிஷ்யன்'' ஒளிபரப்பிய நாள். என் அண்ணன் மகள் — வயது இரண்டு. சிறு சிறு பொம்மைகளை வைத்து, விளையாடிக் கொண்டே டீ.வி. பார்த்துக் கொண்ருந்தாள். பொம்மைகளைத் தொலைத்து விடப் போகிறாளே என்று நான் அவற்றை ஒளித்து வைத்தேன். பிறகு டீ.வி. பார்ப்பதில் லயித்தேன். ஆனால் குழந்தை... பொம்மைகளை நான் எங்கு வைத்திருக்கிறேன் என்று தேடி, அலமாரியின் பக்கத்தில் உள்ள சேரின் மீது ஏறி, அலமாரியில் வைத்திருந்தவற்றை எடுத்துக் கொண்டு, ''கண்டுபுச்சிட்டேன்! கண்டுபுச்சிட்டேன்!'' என்று பாடினாளே பார்க்கலாம்!

— கோகி, செங்குன்றம்.

## கிழமைக் குழப்பம்!

OO (டீ. வி. இரண்டாவது அலைவரிசையில் உரைகல் நிகழ்ச்சி)

உதவியாளர்: திங்கள் கிழமை நடைபெற்ற பத்ரி நாராயணனின் பாட்டுக் கச்சேரி பிரமாதம்னு விழுப்புரம் விஸ்வனாதன் எழுதியிருக்கிறார்:

இவர்: பத்ரி நாராயணனின் பாட்டுக் கச்சேரி திங்கள் கிழமை ஒளிபரப்பாகலியே? வியாழக் கிழமைதானே ஒளிபரப்பாச்சு?

உதவியாளர்: திங்களன்று ஒளிபரப்பிய முன்னோட்டம் நிகழ்ச்சியைப் பார்த்துட்டு எழுதிட்டார் போலிருக்குஸார்!

— தங்கம் நாகேஷ், ஆவடி.

## நிகழ்ச்சி போதித்த அழகுணர்ச்சி!

OO என் பிறந்த நாளுக்கு ஒரு விலையுயர்ந்த நல்ல புடைவை வாங்கித் தர




வேண்டும் என்று என் கணவரைக் கேட்டுக் கொண்டே இருந்தேன். அவருக்கோ விலையுயர்ந்த புடைவை வாங்குவதில் விருப்பமில்லை. இருவரும் வாக்குவாதம் செய்து கொண்டிருந்தோம். முடிவில் என் கணவர், ''இன்று செய்தி வாசிக்கும் பெண் என்ன புடைவை உடுத்தியிருக்கிறாளோ அதே மாதிரி வாங்கித் தருகிறேன்'' என்றார்.

ஒப்புக் கொண்டேன். எப்படியும் ''ஷோபனா ரவி'' தான் அநேகமாக வாசிப்பாள். அவள் உடுத்தும் புடைவை நிச்சயம் நல்லதாகத்தான் இருக்கும் என்ற நம்பிக்கை எனக்கு. ஆனால் அன்று வந்தது ஃபாத்திமா. அவள் உடுத்தி இருந்தது சாதாரண சுங்குடிப் புடைவை. அறுபது ரூபாய்க்குக் கிடைக்கும். அப்போதைக்கு நான் ஏமாற்றம் அடைந்தாலும் அந் நிகழ்ச்சி எளிமையிலும் அழகு உண்டு என்பதை எனக்கு உணர்த்துவது போல் தோன்றியது. சக்திக்கு மீறிய ஆசைகளை நான் இப்போது துறந்து விட்டேன்.

— லக்ஷ்மி மூர்த்தி, புதுக்கோட்டை.

## தமிழ்மீது என்ன கோபம்?

OO தேதி: 26.6.89, நாள்: திங்கட் கிழமை. மாலை எட்டு மணியளவில் தொலைக் காட்சியின் முன் ஆர்வமாக அமர்ந்தேன். 'சித்ர மாலா' நிகழ்ச்சி ஆரம்பித்தது. மலையாளம், கன்னடம், தெலுங்கு, அஸ்ஸாமி, பஞ்சாபி, பெங்காலி என்று பாடல்கள் வந்து கொண்டிருக்க, தமிழ்ப் பாடல் வரும், வரும் என்று நான் காத்திருக்க, நிகழ்ச்சியே முடிந்து விட்டது. மனத்தில் தாங்க முடியாத ஏமாற்றம். இவ்வாறு நடப்பது மூன்றாவது முறை என்று என் தோழிகளும் குமுறினார்கள். தொலைக்காட்சிக்காரர்களுக்குத் தமிழ் மீது ஏன் இந்தக் கோபம்?

— ஏ. நித்யா, சென்னை — 44.

# என் உயிர்த் தோழி

## அத்தியாயம் 14

மாப்பிள்ளையும் தென்னவனும் பார்த்த பார்வைகளோடு சில நொடிகளில் சிட்டுவின் பார்வையும் சேர்ந்திருந்தது. தோழிகள் பிடித்திருந்தும் மண்ணில் விழுவது போன்ற ஒரு பிரமை அவளுக்கு ஏற்பட்டது. தமிழ்முரசு அட்டகாசமாகச் சிரித்துக் கொண்டிருந்தார்.

வாம்மா! வந்து பெரியவங்க கால்ல விழுந்து ஆசீர்வாதம் வாங்கிக்கம்மா...!''

உங்க பொண்ணு எங்ககிட்டே ஆசீர்வாதம் வாங்குறது இருக்கட்டும்! வேற யாருகிட்டேயாவது வேற ஏதாவது வாங்கி இருக்காளா!'' — மாப்பிள்ளையின் பேச்சில் குத்தல் இருந்தது. ஜோதிபுரத்துக்காரர் மகனின் பேச்சைப் புரியாமல் பார்த்துக்கொண்டிருந்தார்.

சிட்டுவுக்கு ஓடிப் போய் ஆள் அரவமற்ற இடத்தில் அழவேண்டும் போல் இருந்தது. தோழிகள் அவள் நடுக்கத்தை வெட்கமென நினைத்துத் தங்களுக்குள் வெட்கப்பட்டு, சிரித்துக் கொண்டனர்.

அடுக்கி வைக்கப்பட்டிருந்த சீர் வரிசைகளைத் தமிழ்முரசு பார்த்துக் கொண்டிருந்தார். இந்த நிகழ்ச்சி முடிந்தவுடன் அவற்றைக் காட்டும் நிகழ்ச்சி. அவர் பெருமைகளைப் பல வடிவங்களில் வெளிப்படுத்தும் நிகழ்ச்சி. எல்லாமே செல்லமகளுக்காகத் தரப் போகும் சீர்.

தென்னவன் மனத்தில் தீவிரம் கூடி இருந்தது. ஒட்டு மொத்தமாக இந்த இடத்திலிருந்து தப்பித்தாக வேண்டும்.

சுவரைத் துளைத்துக் கூட வெளியேறி விட வேண்டும் என்ற வெறி அவனுக்குள் புயல் மையமாகி இருந்தது.

மாப்பிள்ளை சிட்டுவின் பார்வையும் தென்னவனின் பார்வையும் சந்தித்துக் கொண்டதைக் கவனித்தார்.

''அப்பா... இந்த விசேஷத்துக்கு நீங்க வேற யாரையாவது வரச் சொல்லி இருந்தீங்களா!''

''இல்லியே!''

''அப்ப பரணையில இருக்கிறது யாரு...!''

சிட்டு மயக்கமானாள். விழ இருந்தவளைப் பிடித்துக் கொண்டனர். மீறியும்



விழுந்தாள். தாமரை ஏதோ நாட்டு மருந்து முதலுதவி விஷயத்தைச் சொல்லி அதற்குத் தயாராகி விட்டாள்.

''ச்செ! சுத்த மானங்கெட்ட குடும்பம்ய்யா... அதான் காதும் காதும் வச்சாப்புல முடிச்சிடலாம்னுதான் என் வீடு தேடி வந்து மாப்பிள்ளை கேக்க வந்தீங்களா...? சந்தனத்தேவன் பட்டியில விஷயத்தை நாறவிடாம ரகசியமா பேசி முடிச்சிடலாம்னு பாத்தீரா!''

— தமிழ் முரசுவின் மனசையும் உடலையும் நிக்கிரையாக்குவது போல இருந்தன அவர்கள் வார்த்தைகள்.

தமிழ்முரசுவின் குனிந்த தலை நிமிரவே இல்லை. உள்ளே தாமரை ஏதோ சாறு குடிக்கச் சொல்லி, சிட்டுவை வற்புறுத்திக் கொண்டிருந்தாள்.

'நகைச் சிலுவைகள்' அணிந்திருந்த அவளுக்கு அந்த மயக்கம் அப்போது தேவையானதாக இருந்தது.

ஒரு பத்து நிமிடத்திற்குள் அந்த இடம் சுத்தமாகக் காலியாகி இருந்தது.

ஜோதிபுரத்தின் வண்டி காளைகள் கூட ரோஷம் வந்தது போல வேகமாக ஓடின... மாப்பிள்ளை கேலியாகச் சிரித்த சிரிப்பு அந்த வீட்டில் எதிரொலிப்பது போலிருந்தது.

தென்னவன் ஊருக்கு வெளியே இருந்த நரிமலையில் பதுங்கி இருந்தான். அவனோடு பயாஸ்கோப்காரன் உட்கார்ந்திருந்தான். தப்பி வந்ததை யோசித்தான். துரத்தியது ஊர். இவனைப் பிடித்து விட வேண்டும் என்பதில் அவர்கள் சளைக்கவில்லை. இவனும் சளைக்கவில்லை. நடுவில் பயாஸ்கோப்காரனால் அவர்கள் திசை திருப்பி விடப்பட்டது இவன் நரிமலையில் வந்து பதுங்குவதற்கு ஏதுவாயிற்று. பின்னால் அவனும் வந்து சேர்ந்து கொண்டான்.

''ஏம்பா... இங்க வந்துடமாட்டானுங்களா!''

''இந்த நரிமலைக்கு வர்றது கஷ்டம் தென்னவா! அப்படியே அவனுங்க வந்தாலும் இமயமலை வரைக்கும் ஓடி நீ பதுங்குகிற ஆளாச்சே!''

''கிண்டல் பண்ணாதே பயாஸ்கோப்பு! அங்க சிட்டுவுக்கு என்ன நடக்கப் போவுதோ? அத நெனைச்சாத்தான் எனக்குக் கஷ்டமா இருக்குது!''







முகஸ்துதி உப்பைப் போன்றது: கொஞ்சமாய் உபயோகித்தால் ருசியாய் இருக்கும். அதிகமானால் கரிப்பாய் இருக்கும்.

— அரேபியா.

---

தமிழ்முரசுவின் அறைகளில் சிட்டுவின் கன்னம் பிதுங்கி விடுவது போல் இருந்தது.

இடிகளாய் அப்பாவின் அடிகள் அவளுக்குள் இறங்கின. ஆனாலும் அவள் மனத்தில் இருந்த தென்னவனை அந்த அடிகளாலும் வார்த்தைகளாலும் கலைக்க முடியவில்லை.

"பாவி...! ஊர்ல எல்லா நாக்குலயும் என்னை விழவச்சிட்டியேடி! அறியாப் புள்ளன்னு ஆசையா வளத்ததுக்கு அப்பன் உசிரோட இருக்கும்போதே கொள்ளி வச்சிட்டியேடி...! வெளிய தெருவுல நடக்க முடியாம பண்ணிட்டியே...! கூத்தாடியக் கொண்டாந்து கூடத்துல உட்கார வச்சி உன்னையவே ஒண்ணுமில்லாத சூன்யமாக் கிட்டியே...!"

தம் தலையில் அடித்துக் கொண்டார் தமிழ்முரசு. அவர் பேசிய வார்த்தைகளுக்கும் வழங்கிய அடிகளுக்கும் சிட்டுவிடமிருந்து பதிலே இல்லை. நிசப்தமாய்க் கிடந்தாள். பழைய கண்ணீர்த்தடம் அப்படியே கன்னத்தில் கிடந்தது. தாமரையால் கூட அவளை நெருங்க முடியவில்லை.

**தெ**ன்னவன் சொன்ன திட்டங்கள் பயாஸ்கோப்காரனுக்குப் பயத்தை ஏற்படுத்தி இருந்தன.

"நான் நாடோடி மாதிரி திரிஞ்சு நாலு காசு சம்பாதிச்சு, கெடைக்கிறதுல வயத்தை ரொப்பிக்கிட்டுப் போறேன்... நம்மள உள்ள இழுத்துப் போட்டு மாட்டி விட்றாதப்பா.. காத்துப் பட்டாலே விழுந்துட்ற உடம்பு; நாலு கைவி பட்டா அம்புட்டுதான்... ஆமா...!"

தென்னவன் அவனுக்குப் பயத்தைப் போக்கி, தைரியத்தை உருவாக்கிக் கொண்டிருந்தான்.

தன் 'தெய்வீகக் காதலை' எந்தத் 'திருவிளையாடல்' நடத்தியும் முடிக்க வேண்டும் என்பதை விளக்கினான்.

"தென்னவா... என் பயாஸ்கோப்மேல அடிச்சு, சத்தியமாச் சொல்றேன்! அந்தப் புள்ளைய நீ கட்டிக்கிட்டு, கண்கலங்காம அதை வாழ வைக்கணும். அதுக்கு என்னாலான உதவிய செய்றேன்! போதுமா!"

— தென்னவன் 'மகுடி'க்கு பயாஸ்கோப்காரன் 'பெட்டி பாம்பாய்' ஆகி இருந்தான்.

"கேட்டுக்க பயாஸ்கோப்பு...! அவ அப்பன் நம்மள வெட்டாம வுட மாட்டான்! பொண்ணு மேல பாசங் காட்றவன்கிறத விட வேஷங்கட்றவன்தான்றது அவரு மனசுல நம்மளப் பத்தி இருக்கு! அவரு மனசுல இருக்கிறத அழிக்கணுங்கிறது எனக்கு முக்கியமில்லே.. சிட்டு மனசுல இருக்கிறத அழிஞ்சிடாம பாத்துக்கணும்! அதான் எனக்கு முக்கியம்! சிட்டுவோட பட்டணத்துக்குப் புறப்பட்டுப் போயிட்டேன்னா.. எங்கள யாருக்கும் தெரியாது. மத்தவங்களால எந்த தொந்திரவும் எங்களுக்கு வராது... நிம்மதியா இருக்கலாம்!"

பயாஸ்கோப் தோழன் கதை கேட்பது போல கேட்டுக் கொண்டிருந்தான்.

"ராத்திரி வண்டி ரயிலுக்குச் சிட்டுவ மூட்டை முடிச்சோட வீரப்ப அய்யனார் கோயிலுக்கு வரச் சொல்ல வேண்டியது உன் பொறுப்பு... எல்லாத்தையும் அவகிட்ட நீ பக்குவமாப் பேசணும்!"

"எப்படி தென்னவா அது முடியும்...? விட்டா சமையக்கட்டு அதையும் மீறினா சந்தைக் கடை இத விட்டு வேற எடத்த கண்டிருக்காது அந்த கிராமத்து நாத்து... நீ சொன்னேன்னு நான் சொன்னா கூட அது ஒடியாந்துடுமா... விட்டு நெலமைய யோசிச்சுப்பாத்தியா!"

"வேற 'ஸ்கோப்'பே இல்ல பயாஸ்கோப்பு! வண்டி மாட்ட கட்ற மாதிரி வேற யாருக்காவது அவள அவ அப்பன் கட்டி வச்சிடுவாரு... நான் வானத்தைப் பாத்துக்கிட்டு 'தேவதாஸ்' மாதிரி திரிய வேண்டியதுதான்...! எனக்குச் சரின்னு படலேன்னா நான் சொல்ல மாட்டேன்! நீ பக்குவமாச் சொல்றதுலதான் இருக்கு. நிச்சியமா அவ ஒத்துக்குவா!"

**தெ**ன்னவன் ஃபிலிம் சுருள்களை வெளியே எடுக்கச் சொன்னான். வெள்ளை சுண்ணாம்புக் கட்டி தென்பட்டது. துவாரம் வழியாகப் பார்க்கப்படும் அந்த ஃபிலிம்களில் எழுதினான்.

தென்னவனின் மூளைக்கு பயாஸ்கோப்காரன் ஒரு வணக்கம் சொல்லிக் கொண்டான். ரீல் மறுபடியும் மாட்டப்பட்டது.

"இப்ப நீ பாரு... நான் சுத்தற மாதிரி சிட்டு இதப் பாக்குறப்ப நீ சுத்தணும்! புரியுதா..." சுற்றினான்.

ஒவ்வொரு எழுத்தாக நகர்ந்தது.

'சிட்டு... ராத்திரி ரயிலு... பட்டணம்... போறோம்... எல்லாம் எடுத்துக்க.. வந்துடு... மறந்துடாதே...'

'மறந்துடாதே' மட்டும் சரியாக தெரியவில்லை. ஃபிலிம் முடிந்திருந்தது.

"நல்லா இருக்கு தென்னவா... மத்தவங்க பாத்துட்டா பேஜாராயிடுமே....!"

"வேகமா சுத்திடு.. கேட்டா பழைய ஃபிலிம்மு. கோடு விழுந்திடுச்சின்னு சொல்லு!" கூடவே காதில் எதையோ ஓதினான் தென்னவன். கிளம்பினான் பயாஸ்கோப் தோழன்.

**த**மிழ்முரசுவின் வீடு களை இழந்து இருந்தது. வீதிகளில் சப்தம் அடங்கி இருந்தது.

தென்னவனைத் தவற விட்டு விட்டது பலருக்கு ஆத்திரமாக இருந்தது.

"ஜல்லிக்கட்டு காளையவே அடக்கின ஆளுங்க நாம. அவன் ஒருத்தனைப் புடிக்க முடியலையே!"

"அவன் காளை இல்லிங்க குதிரை! சும்மா நூறு மைல் ஸ்பீட்ல இல்லே

போறான்!''

— லீவுக்கு வந்திருந்த டிரைவர் மேதா விலாசத்துடன் பேசினார். அவரை மற்றவர்கள் முறைத்தபோது 'பூஜ்யம் ஸ்பீடிற்கு'த் தம் பேச்சைக் குறைத்துக் கொண்டார்.

பயாஸ்கோப்காரன் சிட்டுவின் வீட்டு முன்னால் வந்து நின்றான். கொஞ்ச நேரத்திற்குக் குடுகுடுப்பைக்காரனாக வேண்டும். அவளை வரவழைக்க வேண்டும். முயற்சி விபரீதமாகவும் வாய்ப்பு இருக்கிறது. வேகமாகத் தமிழ்முரசுவே வெளியே வந்து உடைத்துப் போட்டுப் போய் விடலாம்!

சில சிறுவர்கள் இருபதாவது தடவையாய் ஓடி வந்து நின்றனர். ஒரு முறையாவது இலவசமாய்ப் பார்த்து விட வேண்டும்.

''அண்ணே...! காசு இல்லே...! வீட்ல சோ ள ம் இருக்கு... கொண்டாந்து குடுக்கறேன்... படம் காட்றியா!''

''வெறும் சோளம் வேணாம்... போயி கூழாக்கிக் கொண்டா போ!''

தன் 'மார்னிங் டிபனுக்கு' ஆர்டர் கொடுத்து விட்ட திருப்தி பயாஸ்கோப்காரனுக்கு. பார்த்தான். சிட்டுவின் வீட்டில் ஜன்னல் பாதி மூடி இருந்தது. சிட்டுவின் நடமாட்டம் இல்லை.

''இன்று ஜோரான படம்.. நல்ல படம்.. உங்க கஷ்டத்தைக் காட்டுக்கு விரட்டும் படம்... சிரிக்க வைக்கும் படம். சீக்கிரம் வாங்க... உங்களுக்குச் சேதி சொல்லணும். பாரு பாரு.. பயாஸ்கோப் படத்தைப் பாரு... சேதி சொல்லணும்... சீக்கிரம் வந்து பாரு! சிட்டாக, காற்றாக பறந்து வந்து பாரு''

— சட்டென நிறுத்தினான். தென்னவன் மேல் ஏற்கெனவே ஜனங்களுக்கு இருக்கும் கோபம். இந்தப் பாணி பேச்சால் நம் மீது திரும்பி விடலாம். நிதானத்திற்கு வந்தான்.

'சேதி' வார்த்தைகள் சிட்டுவுக்குக் கேட்டன. அப்பா எங்கேயோ வெளியே போய் இருந்தார். வெளியே வந்தாள். பயாஸ்கோப்காரனுக்கு அவளைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. அவனை நோக்கி வந்தாள். ஊர் தேர் பொலிவிழந்து வருவது போல் இருந்தது. அவனுக்குக் கண்கலங்கி விட்டது.

''வாம்மா! என் பொட்டிய நீ பறந்து ஓடி வந்து பார்த்தது ஒரு சமயம்.. இப்ப... உனக்கு நல்ல காலம் பொறந்திடுச்சிம்மா... சீக்கிரம் பாரு...''

மற்றவர்களை விரட்டினான்.

அவள் பார்த்தாள் இல்லை படித்தாள்..

சிட்டு... ராத்திரி ரயிலு... பட்டணம் போறோம். எல்லாம் எடுத்துக்க... வந்துடு... மறந்துடாதே!

அவளுக்குக் கண்களில் ஒளி பரவியது. பயாஸ்கோப்காரன் கைகளைப் பிடித்துக் கொண்டாள்.

''அவரு எப்பிடி இருக்காரு... பாவி என் விதி அவர ஒரு எடத்துல நிக்க விடாமல் விரட்டிக்கிட்டே இருக்கு!''

''மெல்ல பேசும்மா.. யாராவது கேட்டா என்னைக் கூறுபோட்டுக் குழம்பாக்கிடப் போறாங்க!'' பயாஸ்கோப்காரன் அவளிடம் தென்னவன் 'நிகழ்ச்சி நிரலை'ச் சொல்லி முடித்தான்.

''அவரு நல்லா உனக்கும் சேர்த்துத் தாம்மா யோசிச்சிருக்காரு. நீ வேற மனசைப் போட்டுக் குழப்பிக்காதே! ராத்திரி ரயிலு.. உனக்காக வீரப்ப அய்யனார் கோயிலாண்ட உட்கார்ந்திருப்பான். போறப்போ உனக்குன்னு இருக்கிறத எடுத்துக்கிட்டுப் போயிடும்மா...!''

சிட்டுவுக்குச் சூரியன் ஆமையாகத் தெரிந்தது. மேற்கில் இறங்குவதற்கு ஏன் இவ்வளவு நேரம். அதற்குப் பிறகு ராத்திரி... கிளம்ப வேண்டும்.

பட்டணத்தில் தொடங்கப் போகும் தன் வாழ்க்கையை நினைத்துக் கொண்டாள்.

பூர்வீக நகைகள் சிட்டுவுக்குத் தேவையாக இருந்தன. காது, கழுத்து, மூக்கு, இடுப்பு இந்த நகைகளை விட்டுப் போக அவள் தயாராக இல்லை.

''போறது புது இடம்! எப்படி இருக்குமோ... என்னமோ... அவுங்களுக்கும் வேலை இல்ல....'' — பெட்டி ஒன்றை எடுத்துக் கொண்டாள்.

இரவு முதிர்ந்து கொண்டிருந்தது. தென்னவன் நிச்சயம் வந்திருப்பான். காத்துக் கொண்டிருப்பான். அப்பா வந்தார். எதுவும் பேசவில்லை. அறைக்குப் போய்க் கதவைச் சாற்றிக் கொண்டார். ஊர் அடங்கி இருந்தது.

'போகும் போது வீரப்ப அய்யனாரைக் கும்பிட்டுக் கொள்ள வேண்டும். அப்பா கனவில் அந்த சாமியைத் தோன்றி, சமாதானப்படுத்தச் சொல்ல வேண்டும்.

சிட்டுவின் கால்கள் அந்த இரவைக் கிழிப்பது போல் ஓடிக் கொண்டிருந்தன. கையில் பெட்டி. பெருமூச்சு. ஆள் கண்களில் பட்டுவிடக் கூடாது.

தென்னவன் சரியாகக் காத்துக் கொண்டிருந்தான். அவளையும் சேர்த்துக் கொண்டு அய்யனாரைக் கும்பிட்டான். அவளையும் தரையில் விழுந்து கும்பிடச் சொன்னான்.

''சிட்டு.. ரயில் வர்ற சப்தம் கேக்குது. சீக்கிரம் போயிடலாம் வா..!''

சந்தனத்தேவன்பட்டியைவிட்டுசந்தோஷ சிறகடித்துப் போய்க் கொண்டிருக்கும் சிட்டுவின் சிறகுகள் முறியப் போவது அப்போது அவளுக்குத் தெரியவில்லை.

தென்னவன் முழுத் திருப்தியுடன் பூரணமாய் இருந்த அவளை இழுத்துக் கொண்டு ஓடிக் கொண்டிருந்தான்.

(தொடரும்)

---

**துன்பத்தை அனுபவித்த காலத்தை மறந்துவிடு; ஆனால், அது உனக்குக் கற்பித்த பாடத்தை மறந்து விடாதே.**

**— அல்பேனியா.**

**— எஸ். முகம்மது யூசுப்.**



# பரசுராமனின் டென்னிஸ் பைத்தியம்!

—மெரீனா—

"டென்னிஸ் மகாராணி. விம்பிள்டன் வீராங்கனை. செல்வத்தில் குபேரனி. மேற்கு ஜெர்மனி பெற்றெடுத்த தவப் புதல்வி. இருபது வயது நிரம்பிய வன தேவதை. அழகுச் சிலை, ஆகா... ஆகா.."

எனக்குச் சிரிப்புத் தாங்கவில்லை.

"யாரைச் சொல்றீங்க? மூக்கு நீளமா, குதிரை வால் பின்னலோட ஒரு பொண்ணு டென்னிஸ் ஆடிச்சே... அதைச் சொல்றீங்களா?" என்று கேட்டேன். அவ்வளவு தான்.

பரசுராமனுக்குக் கண்களில் கோபக் கனல் கொழுந்துவிட்டது. கையில் கோடரி இருந்திருந்தால் என்னை இரண்டு துண்டாக வெட்டிப் போட்டிருப்பார்.

"என்ன சொன்னீங்க? ஸ்டெஃபி மூக்கையா கேலி பண்றீங்க... அவ தலையலங்காரத்தையா கிண்டல் பண்றீங்க. அழகை ரசிக்கத் தெரியாத அசமஞ்சம் நீங்க. கலையுணர்வே இல்லாத சுபோதி... அந்த மூக்கும் முடியும்தான் ஸ்டெஃபியின் 'ஸ்ட்ராங்' பாயின்ட்ஸ், தெரியுமா... கோர்ட்டில் அவள் ஓர் ஓவியம், ஆட்டத்தில் ஒரு காவியம்."

"என்ன இன்னிக்குப் பிரமாத மூடில் இருக்கீங்க... கவிதையாப் பேசறீங்க!"

"இன்னிக்கு என் வாழ்நாள்லே மறக்க முடியாத நாள் ஆச்சே.... ஸ்டெஃபி இன்னிக்கு டென்னிஸா ஆடினா? இல்லை, இல்லை, பரதம் ஆடினா, கதக் ஆடினா, மணிப்புரி ஆடினா, ஒடிசி ஆடினா, குச்சுப்புடி ஆடினா... பார்க்கப் பார்க்க அலுக்க வேயில்லை...! மாட்ச் முடிஞ்சு போயிட்டுதேன்னு வருத்தமாயிருந்தது... சார், நீங்க ஸ்டெஃபி அழுது பார்த்திருக்கீங்களா?"

"இல்லை, சிரிச்சும் பார்த்ததில்லே..."

"நான் இன்னிக்கு ரெண்டையும் பார்த்தேன்.. மாட்ச் முடிஞ்சதும் நாற்காலியிலே போய் உட்கார்ந்து, டவலில் முகத்தைப் புதைச்சுக்கிட்டு அழுதுச்சு பாவம்!"

"ஸ்டெஃபி ஏன் அழுதுது...? கடைசியிலே தோத்துடுச்சா?"

"சே... ஜெயிச்சுடுச்சு சார்! பாட்டி மார்ட்டினாவைப் புரட்டியெடுத்துடுச்சே... அந்த ஆனந்தத்தை கண்ட்ரோல் பண்ண முடியாமேதான் அது ஆனந்தக் கண்ணீர் வடிச்சுது.. அதைப் பார்த்ததும் என் கண் கூடக் கலங்கிடுச்சு... அப்புறம் ப்ரைஸ் வாங்கறச்சே, அப்பா பக்கத்துலே வந்து நின்னுக்கிட்டு, கண்ணை இடுக்கிக்கிட்டு, இன்னஸெண்ட்டா, லேசா ஒரு 'ஸ்மைல்' பண்ணிச்சே, அந்த ப்யூட்டியை நீங்க பார்த்திருக்கணும் சார்... ஐயோ, அப்படியே அள்ளிக்கிட்டுப் போயிட்டா..."

"பரசுராமன் உங்களுக்கு டென்னிஸ்லே இவ்வளவு இன்ட்ரஸ்ட் இருக்குன்னு எனக்கு இன்னிக்குத்தான் தெரியும்..."

"உண்மையைச் சொல்லட்டுமா? எனக்கு டென்னிஸ்லே இன்ட்ரஸ்ட் வரத்துக்கே ஸ்டெஃபிதான் காரணம். அவளோட முதல் விசிறி நான். நேர்லே ஒரு தரம் பார்க்கணும்னு ஆசையாயிருக்கு... அவங்க இந்தியாவுக்கு வர சான்ஸ் இருக்கா?"

"ஏன் ஒரு நாள் மெட்ராஸுக்குக் கூட வந்து, எழும்பூர் கோர்ட்லே மாட்ச் ஆடினாலும் ஆடுவா... நீங்க எமோஷனலா எக்ஸைட் ஆயிருக்கீங்க... போய்ப் படுத்துக்குங்க... உங்களுக்கு ரெஸ்ட் தேவை.."

"நோ... நோ... இன்னிக்கு எனக்குத் தூக்கமே வராது.. இன்னிக்கு இரட்டிப்பு சந்தோஷம். ஸ்டெஃபி பிறந்த அதே மேற்கு ஜெர்மனியைச் சேர்ந்த சின்னப்பையன் போரிஸ் பெக்கர், எட்பர்கைத் தோற்கடிச்சுட்டான்..."

**ம**றுநாள் விடியற்காலை நான் 'வாக்' கிளம்பிக் கொண்டிருந்தேன். மாடி பால்கனியிலிருந்து பரசுராமன் அழைத்தார். திரும்பிப் பார்த்தேன்.

"சார்... இன்னிக்கு விடியற்காலை, ஸ்டெஃபிக்கும் பெக்கருக்கும் ஏ.வி.எம். ராஜேஸ்வரி கல்யாண மண்டபத்திலே கல்யாணம் நடக்கிற மாதிரி சொப்பனம் கண்டேன். ஜோடிப் பொருத்தம் பிரமாதம்... ஸ்டெஃபியைக் கைகுலுக்கி வாழ்த்தினேன்... 'தாங்க் யூ'ன்னு என்னைப் பார்த்து ஸ்மைல் பண்ணினா... அதே ஸ்மைல், அதே ப்யூட்டி..."



வட்டமேஜை

# 'வெறுப்பு இல்லை; பொறுப்பு!'

* தலையங்கம் படித்தேன். நன்கு ஆராய்ந்து எழுதப்பட்டது மட்டுமல்ல, நன்மைகளை யார் செய்தாலும் பாராட்டுவோம் என்ற ரீதியிலும் எழுதப்பட்டது அது.

அரசியல்வாதி நிலையிலிருந்து அரசியல் ஞானி நிலைக்குக் கலைஞர் உயர்ந்து வருகிறார் என்று கூறியதோடு 'அந்தப் பாதை வழுக்கும்' என யதார்த்தத்தையும் சுட்டிக் காட்டும் தங்களின் பாணி உண்மையில் வரவேற்கத்தக்கது.

கொடைக்கானல், வி. சக்திவேல்.

* கல்கியின் தலையங்கங்களில் கருத்து மாறுபாடு இல்லாத ஈடுபாடு கொண்டவன் நான், எப்போதுமே! ஆனால் 'அரசியல் வாதி நிலையிலிருந்து அரசியல் ஞானி நிலைக்கு'... என்பதை என்னால் ஜீரணிக்க முடியவில்லை. உங்களுக்கும் அடிசறுக்கி விட்டது!

சென்னை — 92, கே. ராஜகோபாலன்.

* தமிழக முதல்வருக்கு அரசியல் ஞானி என்ற மகுடத்தைச் சூட்டியதற்கு நன்றி. தக்க சமயத்தில் தகுந்த வார்த்தைகளால் பாராட்டியுள்ளீர்கள். கூடவே எச்சரிக்கையும்! சபாஷ்!

பேரளம், க. இராசசேகரன்.

* 'அரசியல்வாதி நிலையிலிருந்து, அரசியல் ஞானி நிலைக்கு' முதல்வரை உயர்த்தியிருப்பது, தி.மு.க. அபிமானியான எனக்கே, 'ரொம்ப அதிகம்' என்று படுகிறது.

இராணிப்பேட்டை, பேப்பர் கார்த்திக்.

* உண்மையில் சொல்கிறேன் அடையாறு ஆலமரம் பற்றிய உங்களின் கட்டுரையும், புகைப்படங்களும் என்னைக் கண்கலங்க வைத்து விட்டன. ஏதோ நமது உடல் உறுப்பில் ஒன்றை இழந்த துக்கம்! அடையாறு ஆலமரம் வளர நெஞ்சுருகிப் பிரார்த்திக்கிறேன்.

மொரட்டுப்பாளையம், இராஜேஸ்வரன்.

* சிங்கப்பூர் பற்றி யார் யாரோ எழுதிப் படித்தாயிற்று! ஆனாலும், சுஜாதா தம் ஸ்டைலில் சிங்கப்பூரை விவரித்திருந்த விதத்தில் ஒரு தனி சுவாரஸ்யமான சுவை இருக்கவே செய்தது.

நெல்லிக்குப்பம், ரா. ஜோதிராமன்.

* மெரீனா கட்டுரையில், சடகோபனின் மூளையில் குழம்பி எழும்பிய கருத்துக்களான சில மாணவர்களுக்காகக் கவலைப்பட்டது, நக்ஸலைட்டுகளை ஒழிக்க என்.டி.ஆர் மேற் கொண்ட திட்டம், இந்தியாவுக்கு ஐந்து பிரதமர்கள் நியமித்தல் என்ற யோசனை ஆகியவை சிந்திக்கும்படி இருந்தன.

அவர் கடைசியாகச் சொன்ன மாதிரியே நடந்தாலும் ஆச்சர்யப்படுவதற்கு இல்லை!

வேலூர், கே.ஆர். தேவேந்திரன்.

* ஜெயலலிதா தொகுதி பற்றி எழுதி ஏன் சார் போடி மக்களின் வயிற்றெரிச்சலைக் கொப்புளிக்க — அவங்களே ஏண்டா ஓட்டுப் போட்டோம்னு இருக்கும் போது.

செய்துங்கநல்லூர், கே. பாலசுப்ரமணியன்.

* சரியான குறும்புக்கார ஆளையாநீர்! புரட்சித் தலைவி செல்வி ஜெயலலிதாவை ஊர் உலகமெல்லாம் தேடிக் கொண்டிருந்த வேளையில் அவருடைய தொகுதிக்கு விசிட் செய்து போடிநாயக்கனூரையே ஓர் அலசு அலசி ஜமாய்த்து விட்டீரே!

ஈரோடு, மேஜர்தாசன்.

* அடையாறு ஆலமரம் மீண்டு துளிர்க்குமா? என்ற கட்டுரையில் ஜூன் 23 ஆம் நாள் காலை என்பதற்குப் பதிலாக ஜூலை 23 ஆம் நாள் என்று வந்திருக்கிறது. இனிவரும் இதழ்களில் தவறுகள் வராமல் பார்த்துக் கொள்ளுங்கள்.

காஞ்சிபுரம், எம். குப்புசாமி.

* 'கிராம ராஜ்யம்' நாடகமாகட்டும், 'சட்டத்தின் திறப்பு விழா' சினிமாவாகட்டும், 'தெய்வ தரிசனம்' புத்தகமாகட்டும், அதன் அதன் தன்மையை — சிறப்பை — உள்ளது உள்ளபடி உணர்த்தி விடுகிறீர்கள். அதுதான் சார் கல்கி பத்திரிகையின் தனிச் சிறப்பு!

மங்கைநல்லூர், ஆர். செல்வராணி.

* இந்த வாரம் வெளியான "அந்தர் பல்டி — சாதா பல்டி — சூபர் பல்டி பதில், அர்த்தமுள்ள பதிலாகும்."

சென்னை — 44, எஸ். குருசாமி.

* 'ஆள் பிடிக்கிறார்கள்' கதை படித்து விட்டு ஆடிப் போய் விட்டேன். மருத்துவமனையில் நான் பட்ட கஷ்டங்கள் என் நினைவுக்கு வந்தன. படித்தவர்களே மருத்துவ மனையில் பாடாய்ப் படும் போது, படிக்காத அந்த அப்பாவிப் பெண்ணைப் பகடைக்காயாக ஏன் பயன்படுத்த மாட்டார்கள்! உண்மைச் சம்பவம் போல் இருந்தது.

தஞ்சை, கவிஞர் சுகன்.

* அறியாப் பருவத்து ஆசைகளை வெறுப்புடன் பார்ப்பதை விட, பொறுப்பைச் சுட்டிக்காட்டும் விதமாக 'எதிர்வீட்டு ஜன்னலை' முடிவிருக்கும் எழுத்தாளருக்கு வாழ்த்துக்கள்.

காஞ்சிபுரம், சாந்தா ஜெயராமன்.

* மாணவர் சிறப்பிதழில், கல்லூரி மாணவர்கள் இயக்குநர் ஆகின்றார்கள் என்கிற தலைப்பில் நிரைப்படக் கல்லூரி முதல்வர் திரு. ஏ. ராஜசேகரனைத் தியாகராஜன் என்று தவறாகக் குறிப்பிட்டுள்ளீர்கள்.

சென்னை — 113, ஆர். கோபிநாத்.

* 'ஒரு காதல் கதை' சிறுகதையில் இருந்த சஸ்பென்ஸ் சூப்பர்ப்! சற்றும் எதிர்பாராத முடிவு!

கோவை — 16, எஸ். பெருமாள்சாமி.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157; ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 53/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

